# இதை மிஞ்ச முடியுமா!

புதிய

# big chief

பழங்களின் சுவை கொண்ட டாஃபி




everest/94/PP/72

# NON-STOP FUN FOR ADULTS BELOW 12. NO KIDDING.





The wonderland that's PAI & CO TOYLAND.

**Now open in Madras.** Stacked with  hours and hours of fun. Lots  and lots of dolls and toys and games. From **Prams** to **Automobiles. G.I. Joe** to **He-man.**  **Barbie** to **Teddy Bears.** **Comics** to  **children's books.** And **cassettes** for all.

**Visit with your family**

**PAI&CO**

**TOYLAND**

SHOP NO. 2., WELLINGDON ESTATE,
24, COMMANDER-IN-CHIEF ROAD, MADRAS - 600 105.

**TOYS, PRAMS, CRADLES, DOLLS, GAMES, CHILDREN'S BOOKS & CASSETTES FOR ALL**

LIVEWIRE / 94

இதோ "தெம்பூட்டும் ஊட்டச்சத்து" மிக்ஸ்.











***விரையுங்கள்.*** ஊட்டச்சத்து மிக்க பழங்கள் மற்றும் பதாம் உள்ளடங்கிய புத்துணர்ச்சியூட்டும் "போனிமிக்ஸ்" பாலோடு கலந்து அருந்துங்கள். விரைவில் அருந்துங்கள், சக்தியால் இது உயரப்பறந்து விடுவதற்குமுன்.

**Bonny Mix**

*உன்னதமான சக்தியூட்டும் மிக்ஸ்*

Avenues:HF-43:54

HF Hindustan Foods Ltd., Goa.

Contains no artificial colours and flavours.

# கால்ஷியம் சிறுமி டீனாவின் வீரச்செயல்

"சர்கஸ் வேடிக்கைகள்"


































பரபரப்பூட்டும் இலவச பரிசுகள்!!

ஆஹா நண்பர்களே, 200 கிராம் பார்லே புருடென்ட் கால்ஷியம் ++ பேக்கின் ஃப்ளாப் (பற்கள் சித்திரம் உள்ள பக்கம்), அத்துடன் உங்களுடைய பெயர், பிறந்த தேதி, பள்ளி மற்றும் வகுப்பு போன்றவற்றை எழுதி அனுப்ப வேண்டிய முகவரி: பார்லே புராடக்ட்ஸ் லிட்., நிர்லான் ஹவுஸ், ஒர்லி, பம்பாய்-400 025.

# மங்கை

செப்டம்பர் '94

☆ திருவிடந்தை நித்திய கல்யாணப் பெருமாள் கோயில் - அருள்வலம்

☆ அமெரிக்காவில் ஜெய ஜெய தேவி

☆ காந்த சிகிச்சையும் வண்ண மருத்துவமும்

☆ சித்த மருத்துவ கேள்வி பதில்கள்

☆ ஸ்ரீ ஜயேந்திரர் பதில்கள்

☆ பின்னணிப்பாடகி சுஜாதா கூறும் 'ஆகாயத்தில் ஒரு திகில் அனுபவம்'

☆ கர்நாடக இசையில் குரல் வள ஆராய்ச்சி செய்யும் அருணா சாயிராம்.

☆ இனிக்க... மணக்க - சமையல் குறிப்புகள் ஏராளமான வீட்டுக் குறிப்புகள்.

ஆன்மிகப் புதிர் பரிசு ரூ. 1000/-

கவிதைப் புதிர் பரிசு ரூ. 500/-

விலை ரூ.6/-




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## பள்ளிகள் வாயிலாக ஆரோக்கியம்

நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம் என்பது பழமொழியோடு நாட்டின் முன்னேற்றத்திற்கும் இன்றியமையாதது. நோயற்ற மனிதன் அந்நாட்டின் செல்வம் ஆவான். அவனது குடும்பம், சமுதாயம் என்பதோடு நில்லாமல் நாட்டையும் பாதிப்பதால் ஒவ்வொரு நாடும் இதற்கு எடுத்துக் கொள்ளும் முயற்சியால் வாழ்நாள் நீடித்து மரண விகிதம் குறைந்து ஒருவன் எழுபது அல்லது எண்பது வயது வரைகூட வாழ்கிறான்.



இதனால் மனிதன் நோய் வாய்ப்படுவதே இல்லை என்பதல்ல. நோய் வெளிப்புற சூழ்நிலையில் ஏற்படு வது. நீராலும், அசுத்தமான காற்றாலும் பர வக் கூடியது. மேலும் மனிதன் சுத்தமாக இருப்பதை யும் பொறுத்தது இது.

தனிப்பட்ட முறையில் ஆரோக்கியத்தை வளர்க்க பள்ளிகளும் ஆசிரியர்களும் உதவ வேண்டும். ஆசிரியர் கள் மாணவர்களுக்கு சுத்தமாக இருக்க வேண்டியதன் அவசியத்தை போதிக்க வேண்டும். புத்தகங்களை மட்டுமல்லாமல் மாணவர்கள் தம்மையும் சுத்தமாக வைத்திருக்கிறார்களா என்று ஆசிரியர்கள் கண் காணிக்க வேண்டும்.



குழந்தைகள் நாட்டின் செல்வங்கள். அவர்களை நன்கு பயன்படுத்திக் கொண்டு நாடு முன்னேற்றம் காண வேண்டும்.

மதிமுகம் : 95 செப்டம்பர் 1994 புன்னகை : 3

தனிப்பிரதி : ரூ. 4.00 வருட சந்தா : ரூ. 48.00



மீண்டும் வந்துவிட்டது... உங்களுடைய செல்ல மகளுக்கு.



# ராஜ் லக்ஷ்மி

## யூனிட் ப்ளான்

*அவளுடைய வளமான எதிர்காலத்திற்கு*




### சிறப்பம்சங்கள்:

- காலவரையறையற்ற ப்ளான்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்பொரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ. 1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ. 21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப் பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- ஒவ்வொரு காலவரையிலும் அறிவிக்கப்படும் போனஸ் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.

எல்லா மியூசுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவைகளாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் ஆட்சித்திறம் பொறுத்து திட்டங்களின் NAV ஏறிடவும் இறங்கிடவும் செய்யும். ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே மற்றும் திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வளர்ச்சியையோ அல்லது வருமானத்தையோ எவ்விதத்திலும் சுட்டிக்காட்டுவது ஆகாது. தயவுசெய்து முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.




**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

**மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101**

**கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060**

UTI-59/94 TA E

செய்திகளும் தகவல்களும்

# சகோதரர்களிடையே போர்




'சகோதரர்களிடையே போர்' என்ற தலைப்புகள் சில செய்தித் தாள்களில் ஏமன் உள்நாட்டுப் போர் தொடர்பாக வெளியாகின. அல்ஜீரியாவின் முன்னாள் அயல் நாட்டு அமைச்சர் லக்தர் இப்ரஹீம் ஐ.நா.வின் சிறப்பு தூதராக ஏமன் சென்று 'சகோதரப் படுகொலை'களை நிறுத்தும்படி வேண்டினார்.

வட, தென் ஏமன் நாட்டு மக்களையே இச்செய்தித் தாள்கள் சகோதரர்கள் எனக் குறிப்பிட்டன. நான்கு ஆண்டுகளுக்கு முன் ஒன்றுபட்ட இந்த ஏமனில் எப்படிப் போர் மூண்டது? மே மாதத்தில் ஒன்றுபட்ட ஏமனிலிருந்து தென் ஏமன் பிரிந்து போய்த் தன்னைச் சுதந்திர நாடு என அறிவிக்கவே, இரு நாட்டுப் படைகளும் போரில் இறங்கின. சுமார் நூறு நாட்கள் நடந்த இப்போரில் ஏராளமானவர்கள் உயிரிழந்தனர்.

ஒன்றுபட்ட ஏமன் உருவானபோது வட ஏமனின் 'பீபிள்ஸ் ஜெனரல் காங்கிரஸ்' கட்சியின் தலைவர் அலி அப்துல்லா சாலே நாட்டின் தலைவரானார். தென் ஏமனின் 'ஏமனி சோஷலிஸ்ட்' கட்சியின் தலைவர் அலி சலீம் அல்பீத் நாட்டின் துணைத் தலைவரானார். ஒன்றுபட்ட நாட்களுக்கு முன் வட ஏமன் இஸ்லாமிய மத வாதிகளின் ஆதிக்கத்தில் இருந்தது. தென் ஏமன் அப்போதைய ரஷ்யாவின் உதவி பெற்று சோஷலிஷ கொள்கையைக் கடைப்பிடித்தது. இப்படி நேர்மாறான கருத்துக்கள் கொண்ட இரு நாடுகள் பொருளாதாரத்தைக் கருத்தில் கொண்டு ஒன்றுபடுவதே சரி எனப் பலர் அபிப்பிராயப்பட்டனர். ஆனால் அந்த ஒற்றுமை நிலைக்குமா என்று ஐயப்பட்டனர்.

ஒன்றுபட்ட ஏமனில் பொதுத் தேர்தல் 1993ல் நடந்தது. 301 உறுப்பினர் கொண்ட

ஆட்சி மன்றத்தில் பீபிள்ஸ் ஜெனரல் காங்கிரசுக்கு 121 இடங்களும் சோஷலிஷ்ட் கட்சிக்கு 56 இடங்களும் கிடைத்தன. 'ஏமன் கேதரிங் பார் ரிபாம்ஸ்' என்ற கட்சி சோஷலிஸ்ட் கட்சியை விட அதிக இடங்கள் பெற்றது. அது பீபிள்ஸ் ஜெனரல் காங்கிரசோடு கூட்டு சேர சாலே நாட்டின் அதிபரானார். ஆனால் இந்த அரசால் நாட்டின் ஒருமைப்பாட்டைக் காக்க முடியவில்லை. சாலே தென் ஏமனின் எண்ணெய் சுரங்கங்களை தன் வசமாக்கிக் கொள்ள முயல இருநாட்டு படைகளிடையே கடும் போர் மூண்டது.

இரு நாடுகளின் தாக்குதல் கடுமையாக நாட்டில் 'அவசர நிலை'யை சாலே அறிவித்தார். அலி சலீமைத் துணைத் தலைவர் பதவியிலிருந்து விலக்கி பாதுகாப்பு, எண்ணெய்த் துறை அமைச்சர்களையும் விலக்கினார். தென் ஏமனின் ஏடன் கவர்னரை மாற்றினார்.

வட ஏமனின் பெரிய படை தென் ஏமனுக்குச் செல்ல, தென் ஏமன் ஸ்கட்ஸ் என்ற நவீன ஆயுதங்களை வட ஏமனின் மீது செலுத்தியது. தென் ஏமன் ஒன்றுபட்ட ஏமனிலிருந்து விடுபட்டுத் தன்னைச் சுதந்திர நாடாக அறிவித்தது. வட ஏமன் தான் போரை நிறுத்த வேண்டுமென்றால் சாலேயின் அரசை அங்கீகரிக்க வேண்டுமென்ற நிபந்தனை விதித்தது. தென் ஏமன் பதிலுக்கு ஏழு நிபந்தனைகளை விதித்தது. சாலே அவற்றை ஏற்கவில்லை.

மூன்று மாதங்கள் உள்நாட்டுப் போர் மூண்டது. இந்த மூன்று மாதங்களில் ஆறு முறை போர் நிறுத்த ஒப்பந்தங்கள் ஏற்பட்டு உடனுக்குடன் மீறவும் பட்டன.

ஏடன் வட ஏமனின் கைக்குச் சிக்கியது. தென் ஏமனின் அலி சலீமும் அவரது சகாக்களும் அண்டை நாடான ஓமனுக்கு ஓடி விட்டார்கள். அங்கிருந்து அவர்கள் தம் இயக்கத்தை நடத்தலாம் என அரசியல் வட்டாரங்கள் கருதுகின்றன. வட ஏமனோ தான் போரை நிறுத்துவதாகவும் ஜனநாயக ரீதியில் புதிய தேர்தல் நடத்தப் போவதாயும் அறிவித்துள்ளது. ஏமனில் இனி என்ன நடக்கும் என்பது கேள்விக் குறியாகவே உள்ளது.

## ஏமன் பற்றிய விவரங்கள்

***வாசனை திரவியங்களுக்குப் பழைம் ஏமன் பெயர் போனது. 16வது நூற்றாண்டில் அது ஆட்டோமன் டர்க் சாம்ராஜ்யத்தில் ஒரு சிற்றரசாக இருந்தது. 1839ல் பிரிட்டிஷார் சுல்தான்களிடமிருந்து ஏடனைக் கைப்பற்றினார்கள். ஏடன் கப்பல் போக்குவரவிற்கு மையமானதால் பிரிட்டிஷார் அதனைக் கட்டுப்படுத்தி வந்தார்கள். முதல் உலகப் போரில் துருக்கி தோற்கவே மற்ற நாடுகளோடு ஏமன் 'அரப் ஏமன் குடியரசு' என்று அறிவித்தது. சில ஆண்டுகளில் ஏடன் சில பகுதிகளைச் சேர்த்து 'பெடரேஷன் ஆஃப் சௌத் அரேபியா' என ஏற்படுத்தியது. அங்கிருந்து பிரிட்டிஷ் படை திரும்பச் செல்ல வேண்டும் என்று அது கோரியது. 1967ல் பிரிட்டிஷ் படைகள் சென்று விட்டன. அதன்பின் 'பீபிள்ஸ் ரிபப்ளிக் ஆஃப் சதர்ன் ஏமன்' ஏற்பட்டது. 1970ல் ஆளுங் கட்சியான மார்க்சிஸ்ட் கட்சி அதற்கு 'மக்கள் ஜனநாயக ஏமன் குடியரசு' எனப் பெயரிட்டது. அடுத்த ஆண்டில் இரு ஏமன்களுக்கிடையே போர் மூண்டு ஓராண்டு காலம் தொடர்ந்தது. 1979ல் உடன்படிக்கை ஏற்பட்டு ஒன்றுபட்ட ஏமனுக்கான பேச்சு வார்த்தைகள் தொடங்கி ''ஏமன் கௌன்சில்' அமைக்கப்பட்டது. இதற்குப்பின் 'ஏமன் குடியரசு' உருவாகியது.***




# மனம் மாறியது

மேலையூர் மாதவன் பட்டணத்து அரசாங்க அலுவலகம் ஒன்றில் வேலை செய்து வந்தான். தினமும் காலையில் தன் ஊரிலிருந்து காட்டு வழியே போய் பட்டணம் அடைந்து அலுவலகத்தில் வேலை செய்து விட்டு மாலையில் தன் ஊருக்குத் திரும்பி வருவது வழக்கம். சிறுவயதில் தந்தையை இழந்த அவனை அவனது தாய்தான் மிகவும் சிரமப் பட்டு வளர்த்துப் பெரியவனாக்கினாள்.

மாதவன் மிக நன்றாகப் பாடக் கூடியவன். ஒருநாள் இரவு அவனது தாய் அவனது பாட்டைக் கேட்டவாறே உயிர் நீத்தாள். இதனால் அவன் உலகில் தனியாக விடப் பட்டான். அவன் மனம் எதிலும் நாட்டம் கொள்ளவில்லை. ஏதோ சமைத்துச் சாப்பிட்டு விட்டு அலுவலகம் போய் வரலானான். அவன் மிகவும் சிரமப்படுவதைக் கண்ட அவனது நண்பர்கள் "நீ ஒரு கல்யாணத்தைச் செய்து கொள்" என்று யோசனை கூறினார்கள்.

கல்யாணம் என்று கேட்டதும் அவன் கண்முன் நின்றவள் அடுத்த வீட்டு அபர்ணாதான். அவள் தந்தை ஒரு வியாபாரி. அவரது ஒரே மகள் என்பதால் அபர்ணா தன் இஷ்டப் படி வளர்ந்தாள். அவள் தினமும் அவ்வூர் கோவிலுக்கு மாலை வேளையில் போய் வருவாள். கோவிலுக்குப் போகுமுன் மாதவனின் வீட்டின் எதிரே உள்ள நந்தவனத்திற்குப் போய் பூப்பறித்து எடுத்துச் செல்வாள்.

மாதவன் அவளைப் பார்த்த போதிலும் அவளுடன் ஒரு வார்த்தை கூட பேசியதில்லை. ஆனால் ஒரு நாள் மாலை அவன் துணிச்சலுடன் அவள் முன் போய் நின்று "நான்

-காரை. குரு மூர்த்தி-




உன்னை விரும்புகிறேன். நீ என்னை மணந்து கொள்கிறாயா?" என்று கேட்டு விட்டான்.

அதைக்கேட்ட அபர்ணா திகைத்துப் போனாள். ஆனால் மறுவினாடியே தன்னை சமாளித்துக் கொண்டு "உனக்குப் பாடத் தெரியுமேயொழிய வீரச் செயல்களைப் புரிய முடியுமா? பணக்காரன் என்று தலை நிமிர்ந்து நிற்க முடியுமா? உன் அழகை எப்போதாவது கண்ணாடியில் பார்த்திருக்கிறாயா? இனிமேல் என்னிடம் இந்த மாதிரிப் பேசாதே" என்று கூறி விட்டுச் சட்டெனப் போய் விட்டாள்.

மாதவன் பதில் பேச நினைத்தும் அவனால் முடியவில்லை. ஏனெனில் அபர்ணா அங்கே இல்லையே. அவனுக்கு அது பெருத்த அவமானமாகப் பட்டது. வாழ்க்கை இனி எதற்கு என எண்ணி அங்கிருந்து காட்டை நோக்கி நடந்தான். நிலவொளியில் அவன் அங்கே ஒரு பாறை மீது அமர்ந்து தன் தாயை நினைத்து மனம் உருகிப் பாடலானான்.

அவன் பாட்டை முடித்தபோது சற்று தூரத்திலிருந்த மரத்திலிருந்து மூன்று பிசாசுகள் "பேஷ்! பேஷ்! பாட்டு மிக நன்றாக இருக்கிறதே" என்று கை தட்டியவாறே அவன் முன் வந்து நின்றன. வாழ்க்கையை வெறுத்துவிட்ட மாதவன் அவற்றைக் கண்டு பயப்படவில்லை.

அவை "உன் பாட்டு நன்றாக இருந்தாலும் அதில் சோகரசமே ததும்பியது. மகிழ்ச்சியைத் தரும் விதமாய் ஒரு பாட்டு பாடு" என்று கூறின. மாதவனும் "மகிழ்ச்சியா? அது இனி என் வாழ்வில் இல்லை. அதனால் அப்படிப்பட்ட பாட்டு பாட முடியாது" என்றான்.

அதுகேட்டு அப்பிசாசுகள் "இந்த இளம் வயதிலேயே உனக்கு வாழ்க்கை மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டதா? அது ஏன்?" என்று கேட்டன. மாதவனும் தான் அபர்ணாவிடம் பட்ட அவமானத்தைக் கூறினான்.

அப்போது பிசாசுகள் தமக்குள் ஏதோ பேசிக் கொண்டன. பிறகு

அவை "அந்த அபர்ணா மகா கர்வம் பிடித்தவள் போல் தெரிகிறது. கவலைப்படாதே. அவளை உனக்குக் கல்யாணம் செய்து வைப்பது எங்கள் பொறுப்பு. இப்போது நீ போய் விட்டு அடுத்த பௌர்ணமியன்று வந்து எங்களை பார்" என்றன. மாதவனுக்கு அவற்றின் வார்த்தைகளின் மீது நம்பிக்கை ஏற்படாது போனாலும் அவன் அங்கிருந்து சென்றான்.

மறுநாள் மாலை அபர்ணா நந்த வனத்திற்கு மலர் பறித்துக் கொண்டு கோவிலுக்குப் போனாள். அங்கிருந்து அவள் திரும்புகையில் ஒரு முயலை ஒருசிறுத்தைப் புலிதுரத்திக் கொண்டு வருவதைக் கண்டாள். முயல் வேகமாக ஓடி எங்கோ பதுங்கி விட்டது. அப்போது சிறுத்தைப் புலிக்கு அபர்ணா தென்படவே அவள் மீது பாய்ந்தது. ஆனால் அப்போது திடீரென மாதவன் ஓடிவந்து அந்தப் புலியைக் கத்தியால் தாக்கிக் குத்திக் கொன்றான்.

அபர்ணா அப்போது மனதில் "ஆகா! மாதவன் இவ்வளவு அசகாயசூரனா?" என நினைத்து ஆச்சரியப்பட்டாள். அவள் அவனுக்கு நன்றி சொல்வதற்குள் அவன் அங்கிருந்து போயே விட்டான். அவள் "ஆபத்தில் உதவியவருக்கு நன்றி கூடச் செலுத்த முடியவில்லையே" என்று எண்ணியவாறே வீட்டை அடைந்தாள்.

அவள் போனதும் முயலும், சிறுத்தைப் புலியும் மாதவனும் பிசாசுகளாகி "பேஷ். நம் திட்டம் நன்கு






செயல்படுகிறது" என்று கூறி மகிழ்ந்தன.

மறுநாள் அபர்ணா கோவிலுக்குப் போய்விட்டு வந்த போது முன்தினம் காலியாக இருந்த இடத்தில் அப்போது ஒரு அழகிய மாளிகை இருப்பதைக் கண்டாள். அவள் அது எப்போது கட்டப்பட்டது என்று திகைத்து நிற்கையில் அம்மாளிகையிலிருந்து மாதவன் வாசலுக்கு வந்து அங்கே இருந்த வேலைக்காரனிடம் ஏதோ சொல்லிவிட்டுச் சென்றான். அதைக் கண்ட அபர்ணா அந்த வேலைக்காரனருகே போய் "இந்த மாளிகை யாருடையது?" என்று கேட்டாள்.

"இது மாதவ அய்யா வீடு. பழைய வீடு பிடிக்காததால் இதைக் கட்டி இங்கே வந்து விட்டார்" என்றான் அவன். "ஒரே நாளிலா இதைக் கட்டினார்?" என்று அவள் கேட்க, அவனும் "மாதவ அய்யாவின் சக்தி சாமர்த்தியங்களை அறிந்தவர்கள் இந்த மாதிரிக் கேட்க மாட்டார்கள்" என்று கூறிவிட்டு மாளிகைக்குள் போய் விட்டான்.

அபர்ணாவும் இதென்ன அதிசயம் என்று எண்ணியவாறே தன் வீட்டை அடைந்தாள். அவள் போன சற்று நேரத்தில் மாளிகையும், மாதவனும் வேலைக்காரனும் பிசாசுகளாக மாறி "பேஷ். அவள் மனம் மாறுகிறது" என்று சொல்லி மறைந்து போயின.

அபர்ணா அன்றிரவு முழுவதும் மாதவனின் தீரச் செயலையும் அவனுக்கு இருக்கும் செல்வத்தையும் பற்றி யோசித்துக் கொண்டிருந்தாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லை. மறுநாள் மனநிலை சரியாக இல்லாததால் அவள் கோவிலுக்கும் போகவில்லை.

அவள் சற்று காற்று வாங்க மாதவனின் வீட்டின் எதிரே இருந்த நந்தவனத்திற்குள் சென்றாள். அங்கு மூன்று அழகிய பெண்களைக் கண்டு அவள் திகைத்துப் போய் "நீங்களெல்லாம் யார்?" என்று கேட்டாள்.

அவர்களும் "நாங்கள் மூவரும் இணைபிரியா நண்பர்கள். மூவரும் இவ்வூரில் உள்ள மாதவனைக் கல்யா

ணம் செய்து கொள்ள விரும்பு கிறோம். ஆனால் அவர் எங்களில் யாரைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறார் என்பது தெரிந்தால் மற்ற இருவரும் அத்திருமணத்திற்குத் தடையாக இருக்க மாட்டோம். அதோ எதிரில் தெரிவதுதானே மாதவனின் வீடு?" என்று அவளிடம் கேட்டார்கள்.

அபர்ணாவும் "அவருடைய வீடு தான் அது. ஆனால் இப்போது அதில் அவர் இல்லை. ஆமாம். இவ்வளவு அழகாக இருக்கும் நீங்கள் போயும் போயும் அழகாகவே இராத இந்த மாதவனையா கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறீர்கள்?" என்று கேட்டாள். வந்த மூன்று அழகிகளும் மூன்று பிசாசுகளே.

மூவரில் ஒருத்தி சிரித்தவாறே "அட பைத்தியக்காரியாக இருக்கிறாயே! புற அழகா அழகு! ரொம்ப அழகானவன் என்று என் அக்கா நிறைய வரதட்சணை கொடுத்து கல்யாணம் செய்து கொண்டாள் ஒருவனை. ஆனால் அவன் ஒரு விபத்தில்..." என்றாள்.

அதற்கு மற்றொருத்தி "வேண்டாம். அந்த கோர சம்பவத்தை கூறாதே. என் சிநேகிதி பணக்காரன் என்றும் அழகன் என்றும் எண்ணி ஜமீன்தாரரின் மகனை மணந்து கொண்டாள். அவனோ குடிகாரன். தினமும் குடித்து விட்டு அவளை அடிக்கிறான். அப்புறம்..." என்று ஏதோ சொல்லப் போனாள்.

அதை மூன்றாவது அழகி இடை மறித்து "இப்போது அந்தக் குடி



காரன் பேச்சு எதற்கு? என் பெரியம்மாவின் பேத்தி மகாமன்மதன், அழகன் என்று வாட்டசாட்டமான ஒருவனோடு ஓடிப்போய் அவனைக் கல்யாணம் செய்து கொண்டாள். ஆனால் அவன் வீட்டிற்குப் போனதும் அவளை வேலைக்காரி போலத் தான் நடத்தினான்" என்றாள்.

அப்போது அபர்ணாவே "போதும். நீங்கள் சொல்ல வந்தது மாதவன் அழகனாக இல்லாது போனாலும் நற்குணங்கள் படைத்தவன் என்றுதானே. அவருக்கு ஏற்கனவே கல்யாணம் நிச்சயமாகி விட்டது. நீங்கள் ஏமாந்து திரும்பிப் போக வேண்டியதுதான்" என்றாள்.

மூவரும் ஆச்சரியப்படுவது போல் "கல்யாணம் நிச்சயமாகி விட்டதா? யார் அந்தப் பெண்?" என்று கேட்டார்கள். அபர்ணாவும் "வேறு யாருமில்லை, நான்தான். நீங்கள் போய் வருகிறீர்களா?" என்று கூறிச் சட்டெனத் தன் வீட்டிற்கு ஓடிப் போனாள்.

மூன்று பிசாசுகளுக்கும் ஒரே மகிழ்ச்சி. தம் திட்டப்படி அபர்ணா மனம் மாறி மாதவனை மணக்கத் தீர்மானித்து விட்டாள் என்று அவை திருப்தி அடைந்தன. அவை ஆந்தைகளாக மாறிப் பறந்து போயின. அடுத்த பௌர்ணமியன்று அவை மாதவனை முன்பு சந்தித்த பாறையருகே வந்து நின்றன.

மாதவன் அபர்ணாவுடன் அங்கு வந்தான். அபர்ணா அப்பிசாசுகளிடம் "நீங்கள் மூவரும் என் கர்வத்தை ஒழித்து எனக்கு நல்ல கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தீர்கள். அதற்கு மிக்க நன்றி" என்றாள்.

அப்பிசாசுகளும் "இந்த சுபகாரியம் இவ்வளவு விரைவில் நடந்ததும் எங்களுக்கு மகிழ்ச்சி. இனி மாதவன் மகிழ்ச்சி தரும் மதுர கீதம் பாட நாங்கள் கேட்டு ரசிப்போம்" என்றன. உடனே மாதவன் பாட ஆரம்பிக்க அபர்ணாவும் சேர்ந்து பாடினாள். பிசாசுகள் அந்த இசையில் லயித்து மெய்மறந்து நின்றன!





# கீர்த்தி சிம்மன் கதை

## 4

*(ஜெயவர்மன் ஜெயசேனன் கொடுத்த தன் தந்தையின் கடிதத்தைப் படித்தான். அதில் அந்த முத்து மாலை எங்கே உள்ளது என்பது பூடகமாகக் கூறப்பட்டிருந்தது. அது ஜெயவர்மனுக்கு விளங்கவில்லை. இப்படியாக ஐந்து தலைமுறைகள் போய் விட்டன. தற்போதைய மன்னன் சுசேனன் தன் மகன் கீர்த்திசிம்மன் அந்த மாலையை அடைய வேண்டுமென விரும்பினான். அதற்காக ஜெயசேனன் மகள் சக்திசேனையைக் கீர்த்தி சிம்மனுக்கு உதவ அனுப்பினான். இதே சமயம் காம்போஜ மன்னன் சதித் திட்டம் வகுத்து கீர்த்திசிம்மனைப் பிடித்துவர மூன்று வீரர்களை அனுப்பினான். பிறகு-)*

கோசல நாட்டிலிருந்து சக்தி சேனை கிளம்பிய அதே நேரத்தில் காம்போஜ மன்னன் கருடதத்தன் அனுப்பிய மூன்று வீரர்களும் கிளம்பிக் காட்டுப் பகுதிக்கு வந்து கொண்டிருந்தார்கள். கீர்த்திசிம்மனும் தன் படிப்பு முடிந்ததால் குறித்த நாளில் அதிகாலையில் குருகுல அதிபர் கிருஷ்ண சந்திரரின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டு கிளம்பினான்.

அவன் தன் குதிரை பானுமதியின் மீது அமர அவனது நண்பர்கள் அவனை வழியனுப்பி வைத்தார்கள். உச்சி வேளையாகும் போது அவன் காட்டின் மத்தியப் பகுதியை அடைந்தான். அது மலைப் பகுதியாகும். அங்கிருந்து இறங்கி வடக்கு நோக்கிப் பயணம் செய்தால் கோசல நாட்டின் தலைநகரை அடைந்து விடலாம். கிழக்கு திக்கில் சென்றால் காட்டின்



நிலையில் பானுமதி என்ன காரணத்தால் நின்றது என்று அவன் யோசிக்கலானான்.

தனக்கு ஏதோ ஆபத்து வரப் போகிறது என்பதை அது உணர்ந்தவே அவ்வாறு நின்று விட்டது என அவன் மனம் எண்ணியது. அப்போது அவன் "பானு! கவலைப் படாதே. எது வந்தாலும் நான் எதிர்த்துச் சமாளிக்கிறேன். நீ நட" என்று அதனைத் தட்டிக் கொடுத்து அதன் மீது ஏறப் போனான்.

அப்போதும் அக்குதிரை லேசாகக் கனைத்து முகத்தைத் திரும்பிக் கொண்டது. அப்போது கீர்த்திசிம்மன் "சரி. உன் இஷ்டம். உன்மீது ஏறவில்லை. கொஞ்ச தூரம் நடந்தே போகலாம்" எனக்கூறி அதனைப் பிடித்து நடத்தியவாறே சென்றான்.

அவன் பத்தடி தூரம்தான் சென்றிருப்பான். அப்போது அவன் தன் தலைக்கு மேல் மிக மெல்லிய பொருள் ஒன்று காற்றில் அசைந்து ஆடி வந்து கொண்டிருப்பதைக் கண்டான். அது வேட்டைக்காரர்கள் மிருகங்களைப் பிடிக்க வீசும் மெல்லிய கம்பி வலை என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது.

அது தன்னை நோக்கியே வருவதைக் கண்டு அவன் தன் கத்தியால் தடுத்து உயரப் போகும்படித் தள்ளி விட்டு துள்ளிக் குதித்து சற்று தூரத்தில் போய் நின்றான். இதற்குள் அந்த வலை அவனது குதிரை மீது

நடுவேயுள்ள சக்தி ஆலயத்தையும் அதையும் கடந்து சென்றால் காம்போஜ நாட்டின் எல்லையையும் அடைந்து விடலாம். அதுவரை வேகமாகச் சென்று கொண்டிருந்த குதிரை பானுமதி ஓரிடத்தில் டக்கென்று நின்றது. அந்த நேரம் வரை எங்கும் நிற்காமல் தொடர்ந்து ஓடி வந்த அக்குதிரை சட்டென நின்று மேலும் செல்லாமல் பலமாகக் கனைப்பது கண்டு கீர்த்திசிம்மன் ஆச்சரியப் பட்டான்.

அவன் உடனே குதிரை மீதிருந்து கீழே இறங்கிச் சுற்றிலும் பார்க்கலானான். கண்ணுக்கெட்டிய தூரம் வரை எந்தக் கொடிய மிருகம் நடமாடுவதாகத் தெரியவில்லை. இந்

விழவே அது அதில் சிக்கிக் கொண்டது.

வலை ஒரு மரத்திலிருந்துதான் வீசப்பட்டிருக்க வேண்டுமென ஊகித்து கீர்த்திசிம்மன் தன் குறு வாளை எடுத்து அம்மரத்தை நோக்கி விட்டெறியப் போனான். அப்போது வேறொரு பக்கத்திலிருந்து அம்புகள் கிளம்பி வந்து அந்த மரத்தைத் தாக்கின. மறு நிமிடமே 'ஓ'வென அலறிய வாறே மூன்று வீரர்கள் அந்த மரத்திலிருந்து கீழே விழுந்து துடிதுடித்து இறந்து போனதைக் கீர்த்தி சிம்மன் கண்டான்.

இது கீர்த்திசிம்மனுக்குக் கோபத்தையும் ஆத்திரத்தையும் மூட்டியது. தன்னைப் பிடிக்க யாரோ திட்டமிட்டே இவ்வாறு செய்திருக்கிறார்கள் என அவன் எண்ணி அவர்கள் யாரெனக் காணத் தீர்மானித்துக் கொண்டான்.

அப்போது அவன் தன் இடை வாளை உருவிக் கொண்டு அம்புகள் வந்ததிசையில்சென்று "யார் அங்கே?" என்று உரத்த குரலில் கேட்டான். அதற்கு பதில் கூற வருவது போல ஒரு இளைஞன் அவனருகே இருந்த மரத்திலிருந்து குதித்து அவன் முன் நின்றான். அவன் தலைப்பாகை அணிந்திருந்தான். அரும்பு மீசைக் கார அந்த வாலிபன் கீர்த்திசிம்மனை வணங்கி நின்றான்.

கீர்த்திசிம்மன் வியப்புடன் அவனைப் பார்த்து "நீ யாரப்பா? இந்த மூவரும் யாரென்று நீ அறிவாயா?" என்று கேட்டான். அந்த வாலிபனும்





னொருவன் சாக்கிய நாட்டவன் என்றும் மூன்றாவது வீரன் நக தேசத்தைச் சேர்ந்தவன் என்பதும் அவனுக்குத் தெரிந்தது. இம்மூன்று நாட்டு வீரர்களும் ஒன்று சேர்ந்து தன்னைத் தாக்க வந்ததால் அம்மூன்று நாடுகளும் சேர்ந்து ஏதோ ஒரு சதித் திட்டம் தீட்டியுள்ளது என அவன் ஊகித்து விட்டான்.

அவன் அந்த வாலிபனைப் பார்த்து "சரி. இப்போது சொல் நீ யார்?" என்று கேட்டான். அதற்கு அந்த வாலிபன் "அந்தக் கேள்விக்கு பதிலளிக்கு முன் நான் ஒரு சிறு கேள்வியைக் கேட்கப் போகிறேன். அதற்கு பதில் சொல்லுங்கள் பார்க்கலாம்" என்றான்.

"அவர்கள் யாரென்று எனக்குத் தெரியாது. அவர்களது ஆடைகளைச் சோதனை போட்டுப் பார்த்தால் ஒருவேளை ஏதாவது தடயம் கிடைக்கலாம்" என்றான்.

கீர்த்தி சிம்மன் முதலில் தன் குதிரையை வலையிலிருந்து விடுவித்தான். அதன் பின் இறந்து கிடந்த வீரர்களின் ஆடைகளைத் தேடிப் பார்க்கலானான். அப்போது அந்த வாலிபன் தன் வாளை உருவி வைத்துக் கொண்டு காவல் காப்பது போல நின்று கொண்டிருந்தான்.

அந்த மூவரின் ஆடைகளைச் சோதனையிட்டுப் பார்த்து விட்டு அவர்களில் ஒருவன் காம்போஜத்தைச் சேர்ந்தவன் என்றும் இன்

கீர்த்திசிம்மனும் ஆச்சரியத்தோடு "நீயா என்னைக் கேள்வி கேட்கப் போகிறாய்? சரி கேள் உன் கேள்வியை" எனவே அவனும் தன் தலையை ஒரு பக்கமாகத் திருப்பிக் கொண்டு "ஆகாயத்தின் ராஜா ராணி யார்?" என்று கேட்டான். அதைக் கேட்டதும் கீர்த்திசிம்மன் அந்த வாலிபனை உற்றுப் பார்த்துப் புன்னகை புரிந்தவாறே "ஓகோ! நீதானா அம்பு எய்து இந்த மூவரையும் கொன்றது? நான் வருவதை அறிந்து என்னைச் சுந்திக்கத்தானே வந்தாய் சக்தி சேனை?" என்று கேட்டான்.

இளம் வாலிபனைப் போல் வேடம் அணிந்து வந்திருந்த சக்தி சேனை "என் கேள்விக்கு இதில்

பதில் இல்லையே!" என்றாள். கீர்த்தி சிம்மன் சிரித்து நின்றான். கார்த்திகைப் பௌர்ணமியின் போது வானத்தில் சந்திரன் நட்சத்திரங்களுக்கிடையே இருந்து ஒளிவீச அதே சமயம் நதியில் மிதக்கும் பல விளக்குகளைச் சுட்டிக்காட்டி "இந்த விளக்குகளை விட ஆகாயத்தில் மின்னும் நட்சத்திரங்களே அழகாக உள்ளன. இங்கே மன்னனாக இருப்பதைவிட ஆகாயத்தில் மன்னனாக இருப்பதே மேல். கீர்த்திசிம்மா! நீங்கள் ஆகாயத்து மன்னராக இருக்க விரும்புகிறீர்களா" என்று சக்திசேனை கேட்டதும் அதற்குப் பதில் அளிக்கும்போது "நான் ஆகாயத்து ராஜா என்றால் நீ ஆகாயத்து ராணி" என்று கூறியதும் கீர்த்திசிம்மனின் நினைவிற்கு வந்தது.

சக்திசேனை தான் சொல்லப் போகும் பதிலைக் கொண்டு முன்பு தான் அவள்பால் கொண்ட நேசம் இன்னமும் இருக்கிறதா எனக் கணடறிய முயல்கிறாள் என்று அவன் புரிந்து கொண்டு விட்டான். அவன் உடனே "ஆகாயத்து ராஜா இந்தக் கீர்த்திசிம்மன். ராணி இந்த சக்திசேனைதான். உன் கேள்விக்குச் சரியான பதில் கிடைத்து விட்டதா மகாராணியாரே!" என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

சக்திசேனையும் நாணித் தலை குனிந்து நின்றாள். அப்போது கீர்த்தி சிம்மன் "ஆமாம். நீ இந்த வேஷத்தில் இங்கே எப்படி வந்தாய்?" என்று



கேட்டான். அவளும் "உங்கள் தந்தை மன்னர்தாம் என்னை இங்கே அனுப்பினார்" என்று கூறி மற்ற விஷயங்களை விளக்கமாகச் சொன்னாள்.

அதன் பிறகு தான் மறைத்து வைத்திருந்த சிறு தந்தப் பேழையை எடுத்து மிகவும் மரியாதையுடன் அவனிடம் கொடுத்தாள். அப்போது அவன் "ஓகோ! நீ இந்தப் பெட்டியைக் கொண்டு வருவது தெரிந்து கொண்டு உன்னைத் தாக்கி இதைப் பிடுங்கிச் செல்லவே இந்த மூன்று வீரர்களும் வந்தார்களா?" என்று கேட்டான்.

அப்போது சக்திசேனை "நான் இங்கே வரப்போவதை இவர்கள் அறிந்திருக்க முடியாது. என் பயணம்



திடீரெனத் தீர்மானிக்கப்பட்டது. எனவே இவர்கள் வந்தது உங்களுக்காகத்தான். உங்களைத் தாக்கி உங்களுக்குக் கேடு விளைவிக்கவே. ஏதோ சதி ஆரம்பமாகியுள்ளது" என்றாள்.

கீர்த்திசிம்மனும் "இவர்கள் என்னை பணயக் கைதியாகப் பிடித்து வைக்க திட்டமிட்டிருக்கிறார்கள் என்பது தெரிகிறது. இவர்கள் சக்தி வாய்ந்த முத்து மாலையை அடையவே என்னைப் பிடித்துப் போக வந்திருக்கிறார்கள் போலும். இது மூன்று நாடுகளும் சேர்ந்து செய்யும் சதியே என்பதில் சந்தேகமே இல்லை. இப்போது நமக்குப் போதிய அவகாசம் இல்லை. இந்த மூவரும் குறித்த காலத்துள் இவர்களை அனுப்பியவர்களிடம் போகாததால் அவர்கள் என்னைத் தேடுவதில் தீவிர முயற்சி மேற்கொள்வார்கள். எனவே மிக விரைவில் நம் வேலையை முடித்துக் கொண்டு தலைநகருக்குப் போய் விடலாம்" என்றான்.

அவன் அந்தப் பேழையிலிருந்த கடிதத்தை எடுத்துப் படித்து விட்டு "பரமேஸ்வரி யார் முன் தலை வணங்கி நிற்பாள்?" என்று கேட்டான். சக்திசேனை சிரித்து "பரமேஸ்வரி யார்? ஒரு பெண்தானே. அவள் தன் கணவன் முன்தானே தலை வணங்குவாள். எனவே பரமேஸ்வரன் முன் தான் அப்படி நிற்பாள்" என்றாள்.

அப்போது கீர்த்திசிம்மன் "பரமேஸ்வரன் வசிப்பது கைலாசத்தில். அது வடக்கு திக்கில் உள்ளது. மனிதன் உயிர் வாழ உணவு அளிப்பது பஞ்ச பூதங்களில் ஒன்றான பூமி. பூமியை முழுவதும் அளந்த வாமனர் கேட்டது மூன்று அடிகளே. இவற்றின் அடிப்படையில் பார்த்தால் அந்த முத்துமாலை ஆலயத்தில் வடக்குப் புறம் பூமிக்குள் மூன்றடி ஆழத்துள் புதைக்கப்பட்டிருக்கிறது என ஊகிக்கலாம்" என்றான்.

சக்திசேனை அதைக் கேட்டு உற்சாகம் அடையவே கீர்த்திசிம்மனும் "சரி. கிளம்பு. நேரமாகிறது. இருட்டுவதற்குள் நாம் சக்தி தேவியின் ஆலயத்தை அடைந்து விட வேண்டும்" என்றான். மறுநிமிடமே இருவரும் தம் குதிரைகளின் மீது அமர்ந்து

வேகமாகச் சென்று இருட்டுவதற்கு முன்பே ஆலயத்தை அடைந்தார்கள்.

அவர்கள் கீழே இறங்கி ஆலயத்துள் சென்றார்கள். வெகுநாட்களாக அது கவனிப்பாரற்றுக் கிடந்ததால் எங்கும் செடி கொடிகளாக வளர்ந்திருந்தன. தூசி படிந்து சிலந்தி வலைகள் தொங்கிக் கொண்டிருந்தன. எவ்வளவு உன்னத நிலையில் இருக்க வேண்டிய ஆலயம் இப்படி பாழடைந்து கிடக்கிறதே என்று அவர்கள் வருந்தினார்கள்.

சக்திசேனை கொண்டு வந்த திறவு கோலால் ஆலயக் கதவைத் திறந்து இருவரும் உள்ளே சென்றார்கள். உள்ளே கர்ப்பக்கிருகத்தில் விக்கிரகத்தின் மூக்கிலிருந்து மூக்குத்தியின் ஒளி பளபளத்தது. இருவரும் அந்த விக்கிரகத்தை பயபக்தியுடன் வணங்கினார்கள்.

கீர்த்திசிம்மனும் "தாயே! நான் வந்தது முத்து மாலையைத் தேடிக் கண்டு எடுத்துச் செல்ல என்றாலும் அதைக் கொண்டு மக்களுக்கு நன்மை புரியவே நான் விரும்புகிறேன். என்னைப் பற்றி நீ நன்கு அறிவாய். நீ தயை புரி. உன் கருணைக்கு மிஞ்சி எதுவும் இல்லை. எனக்கு அருள்புரி. தயாபரி" என்று பிரார்த்தித்து விழுந்து வணங்கி எழுந்தான். சக்திசேனையும் அவ்வாறே வணங்கி எழுந்தாள்.

இருவரும் சுற்றிலுமுள்ள செடி கொடிகளை விலக்கியவாறே ஆலயத்தின் வடபுறம் சென்றனர். அங்கு ஒரு பெரிய வில்வ மரம் இருப்பதைக் கண்டார்கள். அப்போது கீர்த்திசிம்மன் "இது சிவபிரானுக்கு பிரியமான மரம். முத்துமாலை இதனடியில் தான் புதைத்து வைத்திருக்கப்பட வேண்டும்" என்றான்.

சக்திசேனையும் "உங்கள் ஊகம் சரியாகவே இருக்கலாம். ஆனால் நிலத்தைத் தோண்டுவது எப்படி என்றுதான் யோசிக்க வேண்டியிருக்கிறது" என்றாள்.

**(அடுத்த இதழில் முடிவுறும்)**






# இரு கேள்விகள்

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் ஏன் இப்படிச் சிரமப்படுகிறாய்? நீ என்னவோ தன் னலம் கருதாமல் இதைச் செய்தாலும் உன்னை உலகம் பாராட்டும் என்றா நினைக்கிறாய்? சுயநலக்காரர்கள் நேர்மை, நீதி, நியாயம் என்பவை பற்றி எல்லாம் கவலைப்படுவதில்லை. இதை விளக்க உனக்கு காமினி, கனகரத்தினம் என்ற இருவரின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

கனகபுரத்தை ஆண்ட கனகவர்மனின் மகள் காமினி. ஒரே மகளான



தால் மன்னன் அவளுக்கு எல்லாப் படிப்புகளையும் சொல்லிக் கொடுத்தான். அவளது புத்திசாலித்தனத்தையும் திறமையையும் கண்டு பல நாட்டு இளவரசர்கள் அவளை மணந்து கொள்ளப் போட்டி போட்டனர். கனகவர்மனும் அவர்களது உருவப் படங்களை வரவழைத்துக் காமினிக்குக் காட்டினான்.

அவளும் அவற்றையெல்லாம் பார்த்து விட்டு "தந்தையே! இவர்களில் யாரும் எனக்கு ஏற்றவராகத் தோன்றவில்லை என் கணவர் நற்குணங்கள் கொண்டு அழகாயும் வீரச் செயல்கள் புரிபவராயும் இருக்க வேண்டும்" என்றாள்.

அது கேட்டு மன்னன் ஆச்சரியப் பட்டாலும் தன் மகளின் மனம் நோகக் கூடாதே என நினைத்து அவன் எதுவும் கூறவில்லை.

கனகபுரத்தின் வட எல்லையிலுள்ள காட்டுப் பகுதியில் ஒரு பிரம்ம ராட்சஸி இருந்தாள். அவள் அங்குள்ள மலைவாசிகளைப் பிடித்துக் கொன்று விழுங்கி வந்தாள். இதனால் மலைவாசிகள் பயந்து கனகவர்மனிடம் போய் "அரசே! எங்கள் பகுதியில் பிரம்ம ராட்சஸியின் அட்டகாசம் அதிகமாகி விட்டது. அது திடீர் திடீரென்று மக்களைத் தாக்கிக் கொன்று தின்று விட்டு மாயமாய் மறைந்து விடுகிறது. அது ஒருவனை பிடித்துத் தின்பதற்கு முன் அவனிடம் இரண்டு கேள்விகளைக் கேட்கிறதாம். அதற்குச் சரியான பதில் அவர்கள் சொல்லாமல் போவதால் அவர்களை அது விழுங்குகிறதாம். அந்தக் கேள்விகள் என்ன என்பது சரியாகக் காதில் விழாது போதிலும் முடிவில் அது தன் கேள்விகளுக்குச் சரியான பதிலைக் கூறிவிட்டால் பிடித்த மனிதனை விட்டு விடுவதாகக் கூறுவது மட்டும் சிலருக்குத் தெளிவாகக் கேட்டதாம்" என்றார்கள்.

அதைக் கேட்ட கனகவர்மன் "கவலைப்படாதீர்கள். அந்த பிரம்ம ராட்சஸியை ஒழிக்க நான் தக்க நடவடிக்கைகளை மேற்கொள்கிறேன்" என்று கூறி அவர்களை அனுப்பினான்.

அதன் பிறகு அவன் தன் மந்திரி

யைக் கலந்து ஆலோசித்து பிரம்ம ராட்சஸியின் கேள்விகளுக்கு பதில் கூறி அதனை ஒழித்துவிட்டு வருபவனுக்குத் தன் நாட்டில் ஒரு பகுதியைக் கொடுப்பதாக நாடெங்கிலும் பறை சாற்றுவித்தான். அப்படியும் யாரும் பிரம்ம ராட்சஸியை ஒழிக்க முன் வரவில்லை. தம் உயிர் போய் விடுமே என்று யாவரும் பயந்ததே இதற்குக் காரணம். இப்படியே நாட்கள் கழிந்து கொண்டிருந்தன.



ஒருநாள் கனகரத்தினம் என்ற வாலிபன் மன்னனைக் கண்டு தான் பிரம்ம ராட்சஸியைக் கொன்று வருவதாகக் கூறினான். மன்னனும் "அது கேட்கும் கேள்விகள் என்ன என்று தெரியாது. அது வலிமை மிக்கது. உன்னைப் பார்த்தால் சாதாரண கிராமவாசியாகத் தோன்றுகிறாய். நீ வீரனா? ஏதாவது போரில் மகத்தான செயல்கள் புரிந்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

கனகரத்தினமும் "அரசே! நான் போர் வீரனல்ல. வயலில் வேலை செய்து பிழைப்பவன்" என்றான். அது கேட்டு கனகவர்மன் பலமாகச் சிரித்து "ஓ! நீ ஒரு சிறுநாடு கிடைக்கப் போகிறதே என்று ஆசைப்பட்டு பிரம்ம ராட்சஸியைக் காண போகிறாயா? இது வீண் முயற்சி. உன் உயிர் தான் போகும்" என்றான்.

கனகரத்தினமும் "அப்படிப்பட்ட ஆசை எனக்கு இல்லை, அரசே! நான் மலைச்சாதியினருக்கு உதவவே அந்த பிரம்ம ராட்சஸியை எதிர்க்க முன் வந்துள்ளேன். என்னுடன் எங்கள் ஊரிலுள்ள பெரும் பண்டிதரான ஞானசேகரரையும் என் கூட அழைத்துச் செல்லப் போகிறேன். என்னால் மலைவாசிகளுக்கு நன்மை ஏற்படும் என்றால் அதற்காக என் உயிரையும் கொடுக்கத் தயார்" என்றான்.

கனகரத்தினம் இவ்வாறு கூறியது கேட்டுக் கனகவர்மன் அவனது துணிச்சலையும் நல்லெண்ணத்தையும் கண்டு வியந்தான். அவனைச் சாதாரணமாகக் கருதாமல் பெரு மதிப்பு அளித்து பிரம்ம ராட்சஸியை வென்று வர அனுமதியும் அளித்தான். கனகரத்தினமும் மன்னனிடம்



அப்போது அங்கே ஒரு இளைஞன் வந்தான். அவன் தன் பெயர் சோமசேகரன் என்று கூறித் தன்னைக் கனகரத்தினத்திடம் அறிமுகம் செய்து கொண்டான். அவனிடம் "நீ பிரம்ம ராட்சஸியை எப்படி ஒழிக்கப் போகிறாய் என்று பார்க்க வந்தேன். நானும் உன் நண்பருக்குத் துணையாக இங்கே உட்கார்ந்திருக்கிறேன்" என்றான்.

கனகரத்தினம் அது கேட்டு மகிழ்ந்து "இவர் ஞானசேகரர். பெரிய பண்டிதர். ராட்சஸி கேட்கும் கேள்விகளுக்கு பதிலை எனக்குச் சொல்லி உதவ வந்திருக்கிறார்" எனக் கூறி அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு காட்டிற்குள் சென்றான்.

கனகரத்தினம் காட்டினுள் கொஞ்ச தூரம் போனதுமே யாரோ பலமாகச் சிரித்து அவனைப் பிடித்து நிறுத்தவே அவன் திரும்பி பார்த்தான். பயங்கரக் கரிய உருவில் பிரம்ம ராட்சஸி அவன் முன் வந்து அவனைத் தன் கைப்பிடிக்குள் பிடித்து உயரத் தூக்கியது.

கனகரத்தினம் சற்றும் பயப்படாமல் அதனை உற்றுப் பார்த்தான். அது கண்டு பிரம்ம ராட்சஸி" என்னைக் கண்டாலே எல்லோரும் பயப்படுவார்கள். நீ ஏன் நடுங்கவில்லை? நீ மாபெரும் வீரனா அல்லது அறிவு கெட்டவனா?" என்று கேட்டது.

கனகரத்தினமும் "நான் யாராக இருந்தால் உனக்கு என்ன? நீ பிரம்ம

விடைபெற்றுக் கொண்டு அரண்மனைக்கு வெளியே வந்து அங்கு காத்து நின்ற ஞானசேகரரிடம் மன்னனின் அனுமதி கிடைத்ததைக் கூறி அவரை அழைத்துக் கொண்டு காட்டை நோக்கிச் சென்றான்.

அவர்களுக்கு வழிகாட்ட சில வீரர்களை மன்னன் அனுப்பினான். அவர்கள் கனகரத்தினத்தையும் ஞானசேகரரையும் காட்டில் கொண்டு போய் விட்டார்கள். அடர்ந்து உயர்ந்து வளர்ந்த மரங்களைக் கண்ட ஞானசேகரர் பயந்து "ரத்தினம்! இனி நான் வரமாட்டேன். இங்கேயே இருக்கிறேன். நீ போய் பிரம்ம ராட்சஸியைப் பார்த்து விட்டு வா" என்று கூறி ஓரிடத்தில் உட்கார்ந்து விட்டார்.

ராட்சஸிதானே. உன் கேள்விகளைக் கேள்" என்றான். அதுவும் "பூவுலகில் கண்கண்ட தெய்வம் யார்?" என்று தன் முதல் கேள்வியைக் கேட்டது. அப்போது கனகரத்தினம் "சரி. இதற்கு அடுத்த கேள்வியையும் கேள். இரண்டிற்கும் பதில் கூறுகிறேன்" என்றான்.

பிரம்ம ராட்சஸியும் "என் இரண்டாவது கேள்வி குற்றம் புரிந்தவனை தண்டித்து விட்டு அவ்விதம் தண்டனை கொடுத்ததற்காக மிகவும் வேதனைப்படுபவர் யார் என்பதே" என்றது.



கனகரத்தினம் ஒரு நிமிடம் எதுவும் பேசாமல் நின்றான். பிறகு அவன் "இவற்றிற்கு பதில் கூறுமுன் என் ஒரு வேண்டுகோளை நீ ஏற்க வேண்டும். என் உயிருக்குயிரான இரு நண்பர்கள் காட்டின் எல்லையில் உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்களை ஒருமுறை பார்த்து விட்டு வந்து உன் கேள்விகளுக்கு பதில் கூறுகிறேன். ஏனெனில் உன் கேள்விகளுக்குத் தவறான விடைகளைக் கூறினால் என்னை நீ விழுங்கி விடுவாய். மறுபடியும் அவர்களைப் பார்க்க முடியாதே" என்றான்.

பிரம்ம ராட்சஸி "நீ நல்லவனாகத் தோன்றுகிறாய். சொன்ன சொல் தவறமாட்டாய் என்றே நினைக்கிறேன். நீ துணிச்சலானவன். பயப்படுபவனல்ல. அதனால் உன் வேண்டுகோளை ஏற்கிறேன். நீ சட்டெனத் திரும்பி வந்து விடு" என்று கூறி அவனைத் தரையில் இறக்கி விட்டது.

கனகரத்தினமும் வேக வேகமாக ஓடிக் காட்டின் எல்லையை அடைந்தான். அவன் ஞானசேகரரிடம் பிரம்ம ராட்சஸி கேட்ட இரு கேள்விகளையும் கூறி அவற்றின் விடைகள் என்ன என்று கேட்டான். அவரும் "பூவுலகில் கண் கண்ட தெய்வம் பெற்றதாய். இது முதலாவது கேள்வியின் பதில் இரண்டாவது கேள்வியின் பதில் இரக்கம் மிகுந்த மன்னன் என்பதே" என்றார்.

அப்போது சோமசேகரன் குறுக்கிட்டு "முதலாவது கேள்விக்கு ஞானசேகரர் கூறிய விடை சரியே. ஆனால் இரண்டாவது கேள்வியின் விடை



தான் சரியில்லை. அதற்கும் பெற்ற தாய் என்பதே விடை. தன் குழந்தை குற்றம் புரிந்ததும் தண்டித்து விட்டு பிறகு அதற்காக வேதனைப்படுபவள் பெற்ற தாயே" என்றான்.

களகரத்தினம் சட்டென எழுந்து காட்டிற்குள் ஓடினான். பிரம்ம ராட்சஸியும் அவனைக் கண்டு நிறுத்தி "வந்து விட்டாயா! என் கேள்விகளுக்கு இனி விடைகளைச் சொல்" என்றது. களகரத்தினமும் "இரண்டிற்கும் ஒரே விடைதான். பெற்ற தாய் என்பதே அது!" என்றான். பிரம்ம ராட்சஸி ஒரேயடியாக மகிழ்ந்து போய் மறுவிநாடியே அது ஒரு தேவகன்னியாக மாறியது.

அதைக் கண்டு கனகரத்தினம் ஆச்சரியப்பட்டான். தேவகன்னிகையும் "ரத்தினம்! உனக்கு ஆச்சரியமாக இருக்கிறதா? நான் முக்தமாலா என்ற யட்சிணி. ஒரு சாபத்தால் பிரம்ம ராட்சஸியாக இதுவரை இருந்து வந்தேன். இன்றைக்குச் சரியாக நூறு வருடங்களுக்கு முன் இப்பகுதியில் யோகீஸ்வரர் என்ற முனிவர் இருந்தார். அவரது மனைவி இறக்கவே அவர் தம் புதல்வியை அன்புடன் வளர்த்து வந்தார். இங்கு வந்த நான் அவரது அழகைக் கண்டு அவரிடம் சென்று என்னை மணந்து கொள்ளும்படிக் கேட்டேன். அவர் மறுக்கவே அவரை என் விருப்பத்திற்கு இணங்க வைக்க அவரது புதல்வியை பயமுறுத்த பிசாசு போல உருவெடுத்தேன். வீரிட்டு அலறிய அவரது மகளை நான் தூக்கியபோது அவள் துள்ளிக் கீழே விழுந்தாள்" என்று கூறித் தொடர்ந்தாள்.

தன் மகளின் அலறலைக் கேட்டு ஓடி வந்த யோகீஸ்வரர் என்னைக் கண்டு "நீ இதே உருவில் இனிமேல் இருப்பாய்" என்று சபித்து விட்டார். நான் உடனே அவரது கால்களில் விழுந்து சாப விமோசனம் வேண்டினேன்.

அவரும் மனம் இரங்கி "நீ பெண் மனம் படைத்தவளல்ல. பெற்ற தாய் தன் குழந்தையை உயிரினும் மேலாகக் காப்பாள். அது குற்றம் புரிந்தால் அதனை தண்டித்து விட்டு

வேதனைப்படுவாள். எனவே பூவுல கில் அவள் கண் கண்ட தெய்வம். உனக்கு நூறு வருடங்களுக்கு இந்த பிரம்ம ராட்சஸி உருவமே இருக்கும். நீ நான் கூறியதை இரண்டு கேள்வி களாக்கி நீ பிடிக்கும் ஒவ்வொரு வரிடமும் பதிலைக் கேள். எவன் சரியான பதிலைச் சொல்கிறானோ அவனைக் கண்டதும் நீ தேவ கன்னி கையாக மாறிவிடுவாய்" என்றார். நீ சரியான பதில் கூறி எனக்கு சாபத் திலிருந்து விடுதலை அளித்தாய்.

இவ்வாறு அந்த தேவகன்னிகை கூறவே கனகரத்தினமும் "அம்மணீ! இந்த விடையை என் அறிவைப் பயன்படுத்திக் கூறவில்லை. என் நண்பரான பண்டிதர் ஞானசேகர ரிடமும் இன்னொரு இளைஞன் சோமசேகரனிடமும் கேட்டு அறிந்து வந்தே கூறினேன். நான் படிப்பே அறியாதவன்" என்றான்.

தேவகன்னிகையும் "எல்லாம் எனக்குத் தெரியும்" என்று கூறி அவனது தலையைத் தொட்டாள். பிறகு அவள் "ரத்தினம்! நீ இப்போது எல்லா சாஸ்திரங்களையும் கற்ற பண்டிதனாகி விட்டாய். யட்சிணி வித்தைகள் கூட உனக்கு இப்போது தெரியும்" எனக் கூறி அவனை ஆசீர்வதித்து விட்டு மறைந்தாள்.

கனகரத்தினம் மகிழ்ச்சியுடன் திரும்பி வந்து ஞானசேகரரையும் சோமசேகரனையும் கண்டு நடந்த தைக் கூறினான். ஞானசேகரரோ



"நீ என்னைவிடப் பெரிய பண்டித னாகி விட்டாயோ?" என்று கோப மாகக் கூறிக் கொண்டே போய் விட்டார்.

கனகரத்தினம் அதுகண்டு திகைத்து நின்றான். அப்போது சோமசேகரன் "அந்தப் பண்டிதர் சுயநலம் கருதுபவர். கவலைப் படாதே" எனக் கூறி தன் இடுப்பி லிருந்து ஒரு சந்தன மாலையை எடுத்து அவன் கழுத்தில் போட்டான். அதுகண்டு கனகரத்தினம் "ஞான சேகரரின் கோபத்திற்குக் காரணம் தெரிகிறது. ஆனால் நீ எனக்கு மாலை ஏன் போட்டாய்?" என்று கேட்டான்.

சோமசேகரனும் "நான் சோம

சேகரன் அல்ல. காமினி" என்று வெட்கப்பட்டவாறே கூறிவிட்டுப் போனான். கனகரத்தினம் தலைநகருக்குப் போய் கனகவர்மனைக் கண்டு தான் பிரம்ம ராட்சஸியின் பிரச்னையைத் தீர்த்ததைக் கூறினான்.

மன்னனும் "என் மகள் காமினி எல்லாவற்றையும் விவரமாகக் கூறிவிட்டாள். அவள் உன்னைத்தான் மணப்பாளாம். நான் உனக்கு வாக்களித்த நாட்டைக் கொடுப்பதோடு என் மகளையும் மணம் செய்து கொடுக்கிறேன்" என்றான். கனகரத்தினமும் அதற்குச் சம்மதித்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னா! காமினி எல்லா இளவரசர்களையும் நிராகரித்துவிட்டு தேவகன்னிகையின் அருளால் அறிவும் சக்தியும் பெற்ற கனகரத்தினத்தை ஏன் மணந்தாள்? ஞானசேகரரை சுயநலக்காரர் என அவள் கூறி கனகரத்தினத்திற்கு அவள் மாலை போட்டது சுயநலம் கருதித்தானே! இச்சந்தேகங்களுக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "காமினி விரும்பியது நற்குணங்கள் கொண்ட வீரனையே. கனகரத்தினம் மலைவாசிகளுக்காகத் தன் உயிரையே தியாகம் செய்ய வந்தது கண்டு மனம் மகிழ்ந்தாள். அவன் தன் நேர்மையால் தேவகன்னிகையின் அருளுக்குப் பாத்திரமானான். இப்படிப்பட்டவனைத் தானே கணவனாக அடைய காமினி விரும்பினாள். அது நிறைவேறியது. எனவே சுயநலம் கொண்டு காமினி கனகரத்தினத்தை மணக்கவில்லை, தன் கொள்கைப் படி மணந்தாள்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



நம் நாட்டு மரங்கள் :




# தேக்கு மரம்

வீட்டு நிலை வாசல் கதவு, சன்னல்கள், மேஜை, நாற்காலிகள் போன்றவை செய்ய உயர் தரத் தேக்கு மரத்தையே பயன்படுத்து கிறார்கள். இது அதிக விலையானாலும் உறுதியானது. லத்தீன் மொழியில் தேக்கை 'டெக்டானா கிராண்டிஸ்' என்கிறார்கள். டெக்டான் என்ற கிரேக்கச் சொல்லிற்கு தச்சன் என்றும் கிராண்டிஸ் என்றால் பெரிது என்றும் பொருள். பெரிது என்பது பருமனைக் குறிப்பதாம். மரங்களில் இது மிக உயர்ந்தது. பருமனானது இதனால் இதற்கு இப்பெயர் சூட்டப்பட்டது. இது 30லிருந்து 60 மீட்டர் உயரம் வளரும் சில தேக்கு மரங்கள் 60 மீட்டருக்கு மேலும் வளர்கின்றன.

தேக்கு மரக்கிளைகள் நாலாபுறமும் வளர்கின்றன. இக்கிளை 60 செ.மீ. நீளமும் 30 செ.மீ. அகலமுமாய் இருக்கும். இதன் இலைகள் எதிரெதிராக இருக்கும். சிறு செடியாக இருக்கையில் இலை குடை போலப் பெரிதாக இருக்கும். இலையின் மேல் பாகம் சொரசொரப்பாயும் அடிப் பாகம் சிவந்தும் ஊதா நிறத்திலும் இருக்கும். பருவகாலத்தில் சிறிய வெண்ணிறப் பூக்கள் கொத்துக் கொத்தாக மலரும். நவம்பர் ஜனவரி மாதங்களில் இலைகள் உதிர்ந்து கிளைகள் மொட்டையாக இருக்கும்.

தேக்கு உறுதியானது. நீண்ட காலம் இருப்பது. அதனால் ரயில் பெட்டி, படகு, பாலம், வண்டிச் சக்கரம், இருசு போன்றவைகளை இம்மரத்தால் தயாரிக்கிறார்கள். மகாராஷ்டிரத்தில் கார்லா குகைகளின் உட்புற மேல்தளம் தேக்கு மரத்தாலானது. இது இரண்டாயிரம் ஆண்டுகளாகக் கெடாமல் இருக்கின்றது.

வடக்கு மாநிலங்களில் விளையும் தேக்கைவிட கேரளத்திலும் கர்நாடகத்திலும் விளையும் தேக்குகள் உயர்ந்தவை, உறுதியானவை.

# புகழ்பெற்ற மத நூல்கள்






## ஜெந்த் அவெஸ்தா

ஏழாவது நூற்றாண்டில் பாரசீகத்திலிருந்து சிலர் இந்தியாவிற்கு வந்து குடியேறினார்கள். அன்று முதல் அவர்கள் நம் நாட்டையே தம் தாய்நாடாகக் கருதி நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டும் வருகிறார்கள். இவர்கள் பார்சிகள். சிறுபான்மையினர். நாடெங்கிலும் பரவியும் இருக்கிறார்கள்.

பார்சிகள் புகழ்பெற்ற மேதையும் பேச்சாளருமான ஜொராஸ்டர் போதித்த ஜொராஸ்ட்ரியன் மதத்தைக் கடைப்பிடித்து வருகிறார்கள். ஜொராஸ்டர் கிருஸ்து பிறப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்தவர் என வரலாற்று வல்லுனர்கள் கூறுகிறார்கள்.

ஜொராஸ்டரின் போதனைகள் ஜெந்த் அவெஸ்தாவில் தொகுக்கப்பட்டன. ஆரம்ப காலத்தில் இருப்பதோடு அவெஸ்தாக்கள் இருந்தன. அவையாவும் கால வெள்ளத்தில் அடித்துப் போக இப்போது முழுவதுமாக ஒரு நூலும் மற்றும்

ஜொராஸ்டர் பிறந்த போது அவரைச் சுற்றி ஒளி ஏற்பட்டதாம். அக்குழந்தை அழவில்லையாம். சிரித்ததாம். சிறுவனாக இருந்தபோதும் அவர் சிரித்துக் கொண்டே இருந்தாராம். யார் கேட்டாலும் "நல்லதையே நினைத்து, நல்லதையே செய்து கடவுளை வழிபட்டு எல்லோருடனும் யாவும் பகிர்ந்து கொண்டு என் போல இருந்தால் எப்போதும் கவலையற்றுச் சிரித்துக் கொண்டே இருக்கலாம்" என்றார். நாட்டில் பஞ்சம் ஏற்பட்டபோது அவரது தாய் தந்தையர் தம்மிடம் இருந்ததை யாவருக்கும் கொடுத்து விட்டுத்தாம் பட்டினி கிடந்தனர். ஜொராஸ்டர் ஞானத்தைத் தேடிச் சென்றபோது அவரது தந்தை தம் செல்வத்தைக் கொடுக்கவே அதை ஏற்காமல் தன் வீட்டின் நினைவாக ஒரு பெல்டை மட்டும் இடுப்பில் கட்டிக்கொண்டு சென்றார். அவர் ஒரு மலையை அடைந்து அங்கு பத்தாண்டு காலம் தியானத்தில் மூழ்கி பல இன்னல்களுக்கு ஆளாகி இருந்தார். முடிவில் அஹுராமஜ்தா'வுடன் பேசி தன் சந்தேகங்களைத் தீர்த்துக் கொண்டார். அந்த திவ்விய ஒளி தனக்கு சுருக்கமாகக் கூறிய அறிவுரைகளையும் நற்போதனைகளையும் தன் சொற்களாலும் செயல்களாலும் ஜொராஸ்டர் உலகிற்குத் தம் கொள்கைகளாகக் கொடுத்து மக்களை நல்வழியில் நடக்கச் செய்தார்.

சிலவற்றின் பகுதிகளுமே கிடைத்துள்ளன. ஜெந்த் அவெஸ்தாவிற்கும் நம் வேத அறிவுரைகளுக்கும் பொருத்தம் உள்ளதைக் காணலாம்.



வெளிச்சத்திற்கும் சத்தியத்திற்கும் அதிபதியான அஹுராமஜ்தாவுக்கும் இருளுக்கும் துஷ்ட சக்திகளுக்கும் அதிபதியான அஹரிமானுக்கும் இடையே தொடர்ந்து போர் நடந்து கொண்டே இருக்கிறது. இதில் நல்ல சக்திகளே வெல்லும் என கூறுகிறது.

மனிதன் 'அர்மாஸித் சிருஷ்டியான போதிலும் அவனை துஷ்ட சக்திகள் பாதிக்க முயலும். உண்மையைக் கடைப்பிடிக்கும் மனிதன் புனித வாழ்க்கையை நடத்தி வந்தால் உண்மை, வெளிச்சம் ஆகியவற்றின் வெற்றி விரைவில் கிட்டும் என ஜொராஸ்டர் போதித்தார்.

மனிதன் தன் நற்பணிகளால் திவ்வியத் தகுதி அடைகிறான். மனிதன் உண்மைக்காக தொடர்ந்து பாடுபட வேண்டும். இந்த முயற்சியே அவனைக் கடவுளருகே கொண்டு சேர்க்கும்.

"மனிதன் சத்தியத்திற்குக் கட்டுப்பட்டு நடந்தால் மகத்தான பலனை அடையலாம்"

"தெய்வ சக்தியை அதன் உபயோகத்தால் மனதில் கொள்ள வேண்டும். அவற்றையே எப்போதும் நினைக்க வேண்டும்."

"நியாயம் இது என அறிந்து அதன்படி நடக்காதது பயங்கொள்ளியின் செயல்"

இவை ஜொராஸ்டரின் ஒரு சில போதனைகளாம்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. வளைகுடா நாடுகளில் மிகச் சிறியது எது?
2. நம் தேசிய சின்னத்தில் மூன்று மிருக உருவங்கள் உள்ளன? அவை யாவை?
3. குழந்தைகள் மகிழப் பணி புரிந்தோர்க்கு போலண்டு ஒருவிருதை அளிக்கிறது. அது என்ன?
4. மெசபடோமியா எந்த இரு நதிகளிடையே உள்ளது? அதன் தற்காலப் பெயர் என்ன?
5. வானவெளியில் சென்ற முதல் இந்தியர் யார்?
6. புல்லாங்குழலில் எவ்வளவு துவாரங்கள் உள்ளன?
7. செர்னோபிள் துயரச் சம்பவம் எப்போது நிகழ்ந்தது?
8. ஜான்சி லக்ஷ்மிபாய் சிறுமியாக இருந்தபோது அவள் பெயர் என்ன?
9. பிரஷர் குக்கரைக் கண்டு பிடித்தவர் யார்?
10. உலகில் பரப்பளவில் நம் நாடு எத்தனாவது இடத்தை வகிக்கிறது?
11. நான்கு நோபிள் பரிசுகளைப் பெற்ற ஒரே குடும்பம் எது?
12. நம் தேசீயக் கொடியில் மூவர்ணங்களைப் புகுத்தியவர் யார்?
13. உடலின் ஒரு சொட்டு ரத்தம் ஓரிடத்திலிருந்து கிளம்பி மறுபடியும் அதே இடத்தை அடைய எவ்வளவு நேரமாகும்?
14. அண்டார்டிகாவில் நம் நாடு நிறுவிய இடம் எது?
15. முந்திரி மாம்பழத்தில் என்ன விடமின் அதிகம் உள்ளது?
16. ஆங்கிலத்தில் வெளியான முதல் குழந்தைப் பத்திரிகை எது?

## விடைகள்

1. பெஹ்ரெய்ன்
2. சிங்கம், குதிரை, எருது
3. ஆர்டர் ஆப் ஸ்டைல். கேலிச்சித்திரக் காரர் கே. சங்கர் பிள்ளை.
4. யூப்ரடீஸ், டைக்ரிஸ், ஈராக்
5. ராகேஷ்சர்மா
6. எட்டு
7. ஏப்ரல் 25, 1986
8. மணிகர்ணிகா
9. ராபர்ட் போயல்
10. ஏழாவது
11. க்யூரி குடும்பம்
12. பிங்களி வெங்கய்யா
13. 20 நிமிடங்கள்
14. தென் கங்கோத்திரி
15. விடமின் 'சி'
16. தி லில்லிபுட்டியன்



# சாம்பாரில் தங்கம்

கஞ்சியூரில் நஞ்சப்பன் என்ற ஏழை இருந்தான். அவன் தந்தை பணக்காரராகத் தான் இருந்தார். ஆனால் ஏதோ வியாபாரம் செய்து அதில் நஷ்டம் வரவே அவர் மனம் உடைந்து இறந்து போனார். அப்போது நஞ்சப்பனுக்கு நான்கு குழந்தைகள்.

அவனுக்கு அவ்வூரில் வேலை செய்து பிழைக்க முடியாமல் இருந்தது. அதுவரை கௌரவமாக வாழ்ந்து விட்டு அதே ஊரில் கூலி வேலை செய்யப் பிடிக்கவில்லை. அதனால் அவன் தன் மனைவி மக்களோடு வேறு ஊருக்குச் சென்றான். அங்கு என்ன கஷ்டப்பட்டு வேலை செய்த போதிலும் குடும்பம் நடத்தப் போதிய பணம் கிடைக்கவில்லை.

ஒருநாள் நஞ்சப்பனுக்கு எந்த வேலையுமே கிடைக்கவில்லை. ஏற்கனவே அவன் பலரிடம் கடன் வேறு வாங்கிவிட்டான். அதனால் யாரிடமும் கடன் கேட்கவும் முடியவில்லை. அவனுக்குப் பசியோ வயிற்றைக் கிள்ளியது. அன்றுதான் மனைவி மக்களுக்கு எப்படி சாப்பாட்டிற்கு வழி செய்வது என்ற கவலை வேறு சேர்ந்து கொண்டது.

அவன் ஊரெங்கும் திரிந்தபோது ஒரு பணக்காரர் வீட்டில் கல்யாணம் நடந்து கொண்டிருந்தது. சமையல் நடக்கும் இடத்தை மறைக்கத் தட்டி கட்டப்பட்டிருந்தது. சமையல் வாசனை நஞ்சப்பனின் மூக்கைத் துளைத்தது.

கல்யாண வீட்டிற்குள் நஞ்சப்பனால் வாசல் வழியாகச் செல்ல முடியாது. ஏனெனில் அவனது அழுக்கான கிழிந்த ஆடைகள் அவன் அக்கல்யாணத்திற்குச் சம்மந்தப் பட்டவனல்ல என்று காட்டிக் கொடுத்துவிடும். எனவே பின்புறமாகப் போய் சமையல் நடக்கும்

-கி. பாலாஜி-



இடத்தில் கட்டப்பட்ட தட்டி ஒன்றை விலக்கிக் கொண்டு யார் கண்ணிலும் படாமல் சென்றான்.

அங்கே ஓரிடத்தில் இனிப்புத் தின்பண்டங்கள் செய்து வைக்கப் பட்டிருந்தன. அவற்றில் ஒன்றை எடுத்து நஞ்சப்பன் வாயில் போட்டுக் கொள்ளப் போனான். அப்போது யாரோ அங்கு வரவே அவன் சட் டென அங்கிருந்து பெரிய சாம்பார் அண்டாவின் பின்னால் ஒளிந்து கொண்டான்.

வந்தவள் சற்றுப் பருமனான நடுவயதுப் பெண்மணி. அவள் அங் கும் இங்கும் பார்த்தவாறே சாம்பார் அண்டா அருகே நின்றாள். அப் போது சற்று தூரத்திலிருந்து யாரோ ஒருவர் "முத்தம்மா! வரும்போது கத்திரிக்காய் கறிப்பாத்திரத்தை எடுத்துவா" என்று குரல் கொடுத் தார். முத்தம்மாவும் "இதோ கொண்டு வருகிறேன்" என்று கூறியவாறே தன் மடியிலிருந்து ஏதோ சிலவற்றை எடுத்துச் சாம்பார் அண்டாவினுள் போட்டான்.

அதை அண்டாவின் பின்னால் மறைந்திருந்த நஞ்சப்பன் கவனித்து விட்டான். அவள் ஏதோ அந்த வீட் டில் திருடி எடுத்து வந்து வைத்திருக் கிறாள் என்பது அவனுக்குத் தெரிந்து போயிற்று. முத்தம்மா அங்கிருந்து போனதும் இன்னொரு தின்பண் டத்தை எடுக்கப் போனான். அதை யாரோ பார்த்து விட்டான். அவன் உடனே 'திருடன்' திருடன்' என்று கத்தவே சிலர் ஓடி வந்து ஓட முயன்ற நஞ்சப்பனைப் பிடித்துக் கொண்டார்கள்.

அவர்கள் அவனை அந்த வீட்டு எஜமானனின் முன் நிறுத்தினார்கள். அவனிடம் அவர்கள் "இவன் திருட் டுத் தனமாகச் சமையற்கட்டில் புகுந்துவிட்டான். இவன் இனிப்புத் தின்பண்டங்களைத் திருட முயன்ற போது இவனை நாங்கள் கையும் மெய்யுமாகப் பிடித்து விட்டோம்" என்றார்கள்.

எஜமானரும் "நீங்கள் அசகாய சூரர்கள்தான். யாரோ ஒருவர் ஒரு இனிப்புத் தின்பண்டத்தை எடுத்த தைப் பெரிய திருட்டு என்று கண்டு

பிடித்து விட்டீர்களே" என்று கேலியாகக் கூறினார். அப்போது நஞ்சப்பன் "ஐயா! நான் திருடன் இல்லை. நான்கு குழந்தைகளுக்குத் தகப்பன். இன்று எனக்கு எந்த வேலையுமே கிடைக்கவில்லை. பசியால் துடி துடிக்கும் ஏழை நான். உங்கள் சமையல் கட்டிலிருந்து வந்த வாசனை என்னை இங்கு வரை இழுத்து வந்து விட்டது" என்றான்.

வீட்டு எஜமானரும் அவனை ஏற இறங்கப் பார்த்து விட்டு "சமையல் வாசனை உன்னை இழுத்தாலும் யாருக்கும் தெரியாமல் நீ உள்ளே வந்தது தவறுதானே" என்று கூறி அவனைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றார். அங்கு ஒரு தட்டில் தனக்கு உணவையும் மற்றொரு தட்டில் நஞ்சப்பனுக்கு உணவையும் கொண்டு வந்து வைக்கும்படித் தன் வேலையாளிடம் கூறினார். அவர் நஞ்சப்பனை சாப்பிடச் சொல்லி தானும் அவன் முன் உட்கார்ந்து சாப்பிட்டார்.

அவன் சாப்பிட்டு முடித்ததும் அவர் "உனக்கு ஏன் சாப்பாடு போட்டேன் தெரியுமா?" என்று கேட்டார். நஞ்சப்பன் கண்களில் நீர் கசியத் தனக்குத் தெரியாது என்று தலையை ஆட்டினான்.

எஜமானரும் "சாதம் சுவாமிக்குச் சமம். அதைத் திருடிச் சாப்பிடும் நிலை எந்த மனிதனுக்கும் ஏற்பட்டு விடக்கூடாது. உன்னைப் பார்த்தால்



திருடிப் பழகியவனாகத் தெரியவில்லை. இந்த நிலை உனக்கு எப்படி ஏற்பட்டது?" என்று பரிவுடன் கேட்டார்.

அப்போது நஞ்சப்பன் தன் தந்தை வியாபாரம் செய்து நஷ்டமடைந்து மனம் உடைந்து இறந்து போனதைக் கூறினான். அதன்பின் தான் பணமில்லாமல் கஷ்டப்படுவதையும் தன் ஊரை விட்டே வெளியேறி அவ்வூருக்கு வந்ததையும் அங்கும் குடும்பத்தைக் காப்பாற்ற பணம் கிடைக்கவில்லை என்றும் கூறினான்.

அதைக் கேட்ட எஜமானர் பெருமூச்சு விட்டு "வியாபாரம் என்றால் லாபம் தான் வரும், நஷ்டம் வராது என்ற எண்ணம் கூடாது. இப்போ

துள்ள நிலை உன்னைத் தின்பண்டத்தைத் திருட வைத்தது. நாளை உன் குழந்தைகள் இப்போது நீ செய்வது போலவே திருட்டுத் தொழிலில் இறங்கும் அபாயம் இருக்கிறது. இன்று உன் பசியைத் தீர்த்தேன். நர்ளைக்கு வா. உனக்கு ஏதாவது வேலை போட்டுக் கொடுக்கிறேன். இப்போது உன் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் சாப்பாடு கட்டி எடுத்துக் கொண்டு போ" என்றார்.

அப்போது நஞ்சப்பன் "நீங்கள் எனக்கும் என் குடும்பத்தவருக்கும் உணவு கொடுத்தீர்கள். அதற்கு மிக்க நன்றி. ஆனால் சமையல் எப்படி இருக்கிறது என்று கேட்கவில்லையே" என்றான். அதைக்கேட்ட எஜமானர் ஆச்சரியமே அடைந்தார். அவன் அப்படிக் கேட்டதற்கு ஏதோ ஒரு உட்பொருள் இருக்கிறது என நினைத்தார். எனவே அவர் சற்று யோசித்து "சரி, நீயே சொல். சமையல் எப்படி இருக்கிறது?" என்று கேட்டார். அவனும் "எல்லாம் நன்றாக இருக்கிறது ஆனால் சாம்பாரில் மட்டும் தங்கம் இருப்பது போல் தெரிகிறது" என் றான்.

அவரும் "சாம்பாரில் தங்கமா?" என்று ஆச்சரியத்துடன் கேட்கவே நஞ்சப்பனும் தான் ஒளிந்திருந்த போது முத்தம்மா செய்ததைக் கூறினான். உடனே எஜமானர் சமையற்கட்டிற்குப் போய் சாம்பார் அண்டாவில் என்ன இருக்கிறது என்று பார்த்தார். அதிலிருந்து நாலு வடத் தங்கச் சங்கிலி கிடைத்தது. அவர் உடனே முத்தம்மாவைக் கூப்பிட்டு விசாரிக்கவே அவள் தான் அதைத் திருடியதை ஒப்புக் கொண்டாள்.

தின்பண்டம் திருடவந்த நஞ்சப்பன் உண்மையான திருடியைக் கண்டுபிடித்துக் கொடுத்ததில் வீட்டு எஜமானர் பரம திருப்தி அடைந்தார். அவர் மறுநாளே நஞ்சப்பனுக்கு வேலை போட்டுக் கொடுத்து அவன் குடும்பம் கஷ்டப்படாதபடி பார்த்துக் கொண்டார்.






# நன்றிக்கடன்

பொன்னனுக்குக் குடும்பப் பொறுப்பு மிக அதிகம். நோயாளியான தந்தைக்கு வைத்தியம், தாய் விரும்பும் பட்டுச் சேலைகள், கல்யாணத்திற்கு நிற்கும் இரு தங்கைகள், வீட்டைச் செப்பனிடுதல் என்றெல்லாம் அவனுக்குப் பிரச்னைகள்.

இவற்றை எல்லாம் சமாளிக்க அவனிடம் பணம் இல்லை. புத்திசாலிதான். ஆனால் பிறருக்கு உதவுவது தன் முதல் வேலை என்று அவன் கருதியதால் தன் வேலைகளை கவனிக்க முடியவில்லை.

பலர் அவனிடம் பணம் எப்படி எல்லாம் சம்பாதிக்கலாம் என்று சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் அவனது தந்தையோ "பொன்னா! நீ எவ்வளவு கஷ்டப்பட்டாலும் நேர்மையை மட்டும் கைவிட்டு விடாதே. இந்த நல்ல குணமே நிரந்தர மகிழ்ச்சியை அளிக்கும்" என்று அறிவுரை கூறினான்.

தன் ஊரில் இருந்தால் பணம் சம்பாதிக்க முடியாது என்று நினைத்து பொன்னன் பட்டணத்திற்குக் கிளம்பினான். வழியில் அவன் ஒரு காட்டைக் கடக்க வேண்டி இருந்தது. அவன் களைத்துப் போனதால் சற்று இளைப்பாற ஒரு மரத்தடியே தங்கினான்.

அந்த மரத்தின் மேல் ஒரு பிசாசு இருந்தது. அது தன்னோடு இருந்து பேச யாருமே இல்லையே என்று தவித்துக் கொண்டிருந்தது. அது பொன்னனைக் கண்டதும் சட்டெனக் குதித்து அவனருகே போய் நின்று "பயப்படாதே. எனக்கு ஏதாவது நல்ல விஷயம் ஒன்றைக் கூறு. அது சுவாரசியமாக இருக்க வேண்டும். உனக்கு நிறையப் பணம் கொடுக்கிறேன்" என்றது.

பொன்னனும் பயப்படாமல் ஒரு

-கே. பாலகிருஷ்ணன்-

பக்காத் திருடனின் கதையை அதற்குச் சொன்னான். அதுவும் ஆவலுடன் அந்தக் கதையைக் கேட்டு விட்டு "நீ சொன்ன கதை ரொம்ப நன்றாக இருக்கிறது. நீ இங்கேயே என்னோடு இருந்துவிடு" என்றது.

பொன்னனும் "இருந்து விடலாம் ஆனால் எனக்கு சில பொறுப்புகள் இருக்கின்றனவே" என்றான். பிசாசு அவனிடம் ஒரு பை நிறையத் தங்க நாணயங்களைப் போட்டுக் கொடுத்து "நீ போய் விரைவில் உன் பொறுப்பு களை எல்லாம் முடித்து விட்டு வா" என்றது.

பொன்னன் பணப்பையோடு வீட் டிற்குச் சென்றான். தன் தந்தையின் வைத்தியத்திற்கு ஏற்பாடு செய்தான். தாய்க்குப் பட்டுப்புடவைகளை வாங் கிக் கொடுத்தான். வீட்டைச் செப்ப னிட்டான். இதன்பின் அவனுக்குப் பிசாசின் நினைவு வரவே அவன் காட்டிற்குச் சென்றான்.

அங்கு அவன் இரண்டு நாட்கள் இருந்து பிசாசிற்கு ராஜா ராணி கதைகளைச் சொன்னான். அவற் றைப் பிசாசு வெகுவாக ரசித்தது. பொன்னன் தான் ஊருக்குப் போய்த் தன் தங்கைகளின் திருமணங்களைச் செய்து வைக்க வேண்டும், அதற்கு பணம் வேறு வேண்டும் என்றான்.

பிசாசும் "அதற்கெல்லாம் நான் பணம் கொடுக்கிறேன். நீ அவர்களது திருமணங்களை முடித்து விட்டு வந்துவிடு" எனக் கூறி இரண்டு பைகள் நிறைய தங்க நாணயங்கள் போட்டுக் கொடுத்தது. அவனும்



அவற்றோடு வீட்டை அடைந்தான்.

பொன்னன் தன் இரு தங்கைகளின் திருமணங்களைச் செய்துவிட்டு கொஞ்சம் நிலம் வாங்கிப் போட்டான். இவ்வாறு தன் குடும்பப் பிரச்னைகளை எல்லாம் தீர்த்துவிட்டு பிசாசிடம் போவது பற்றி யோசித்தான். தான் பிசாசிற்குத் துணையாக இருக்க வேண்டும் என்றால் தற்கொலை செய்து கொண்டு பிசாசாக மாற வேண்டும் என்று எண்ணினான்.

அவன் தற்கொலை செய்து கொள்ளும் நோக்கத்தோடு ஊருக்கு வெளியே உள்ள உயரமான ஒரு பாறை மீது ஏறினான். அங்கிருந்து குதித்து உயிர் விடுவது அவன் நோக்கம். ஆனால் அவன் பாறையின் உச்சியை அடைந்தபோது அங்கு அழகான பெண் ஒருத்தி நின்றுகொண்டிருந்தது கண்டு திகைத்துப் போனான்.

அவள் பெயர் மங்கம்மா. அவள் தன் சிற்றன்னையின் கொடுமை தாங்காமல் அவள் தன்னை ஒரு பணக்காரக் கிழவனுக்கு கல்யாணம் செய்து வைக்க முடிவு செய்தது கண்டு தன் ஊரிலிருந்து யாருக்கும் தெரியாமல் வந்து விட்டாளாம். அவளும் தற்கொலை செய்து கொள்ளும் நோக்கத்தோடு அங்கு வந்திருப்பதாகப் பொன்னன் தெரிந்து கொண்டான்.

இருவரும் தம் பிரச்னைகளைப் பரிமாறிக் கொண்டனர். அப்போது மங்கம்மா "நல்லவர்கள் இறந்தால்



சொர்க்கத்திற்குப் போவார்கள். நீங்கள் தற்கொலை செய்து கொண்டாலும் பிசாசாக மாறமாட்டீர்கள். எனவே எனக்கு உதவ என்னை மணந்து கொள்ளுங்கள்" என்றாள்.

அப்போது பொன்னன் "உன்னை நான் மணக்கத் தயார். ஆனால் அந்தப் பிசாசிற்கு நன்றிக் கடன் செலுத்த வேண்டுமே" என்றான். மங்கம்மாவும் "அதற்கென்ன? நாம் திருமணம் செய்து கொண்டு அந்த மரத்தடியே வீட்டைக் கட்டிக் கொண்டு வாழலாம். நீங்கள் அப் பிசாசிற்குத் துணை இருப்பது போலாகிவிடும்" என்றாள்.

பொன்னனுக்கு மங்கம்மா சொல்வது சரி என்றே பட்டது. அவர்களிருவரும் கடவுளை மனதில் தியானித்துக் கொண்டு கணவன் மனைவியாக ஆனார்கள். அதன் பின் பிசாசைக் காண அவர்கள் அந்த மரத்தடிக்குச் சென்றார்கள்.

அப்போது அவர்களின் முன் ஒரு தேவ புருஷன் தோன்றினான். அவன் அவர்களிடம் "நான் ஒரு சாபத்தால் பிசாசாகி இந்த மரத்தில் இருந்து வந்தேன். நற்குணம் படைத்து தியாக மனப்பான்மை கொண்ட உன்னால் எனது சாபம் விலகிவிட்டது. நீங்கள் இருவரும் இங்கு வருவீர்கள் என்றே காத்திருந்தேன். நீங்கள் சுகமாக வாழ்வீர்களாக!" என்று ஆசி கூறிவிட்டு மறைந்து போனான். போகுமுன் அவர்களுக்குத் தன் அன்பளிப்பாக இரு பைகள் நிறையத் தங்க நாணயங்களைக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

பொன்னன் மங்கம்மாவைத் தன் ஊருக்கு அழைத்துச் சென்றான். அங்கு அவன் தாய் தந்தையரோடும் மனைவியோடும் ஒரே வீட்டில் வசித்து நில புலன்களை கவனித்துக் கொண்டு சுகமாக வாழ்ந்தார்கள். மங்கம்மாவுக்கும் அவனுக்கும் முறைப்படி விவாகம் நடைபெற்றது.






சுக்கிரரின் சாபம் கேட்டு பயந்து யயாதி அவரது கால்களில் விழுந்து "எனக்கு சாபம் கொடுத்தது சரியல்ல. சர்மிஷ்டை தனக்கு புத்திரபாக்கியம் வேண்டும் என என்னிடம் வேண்டினாள். அதை நிறைவேற்றாவிட்டால் என்னைப் பாவம் வந்தடையும் அதனால் அவளது கோரிக்கையை ஏற்றான். நான் தேவயானிக்குத் துரோகம் செய்ய நினைக்கவே இல்லை நான் குற்றமற்றவன். எனவே இந்த சாபத்தை நீங்கள் விலக்க வேண்டும் என்றான்.

சுக்கிரரோ "நான்கொடுத்த சாபம் பலித்தே தீரும். நீ இந்த முதுமையைக் கொஞ்ச காலத்திற்கு விட்டு விட்டு இளமையை அடைந்து சுகங்களை அனுபவிக்க விரும்பினால் அதற்கு ஒரு வழி உண்டு. உன் முதுமையை யாராவது ஒரு இளைஞன் வாங்கிக் கொண்டு அவன் தன் இளமையை உனக்குத் தர வேண்டும். நீ விரும்பும் வரை அந்த இளமையுடன் இருக்கலாம். பிறகு அவன் இளமையைக் கொடுத்துவிட்டு உன் முதுமையை வாங்கிக் கொள்ளலாம். தெரிந்ததா?" என்றார்.

யயாதியும் சரி எனக் கூறி யாரிடம் தன் முதுமையைக் கொடுத்து அவனது இளமையைப் பெறுவது என யோசிக்கலானான். அன்னியர்களைக் கேட்பதை விடத் தன் புத்திரர்களிடமே கேட்பது என நினைத்து தன் இளமையைக் கொடுக்கும் மகனுக்கே தன்



நாட்டை அளிக்கவும் தீர்மானித்தாள்.

சுக்கிரரின் சாபத்தால் கிழவனாகி விட்ட யயாதி தன் புதல்வர்களை அழைத்து தன் முதுமையை யார் வாங்கிக் கொண்டு தன் இளமையைக் கொடுக்கத் தயார் என்று கேட்டான். மூத்த மகன் யது தன்னால் முடியாது எனக் கூறவே யயாதி கோபம் கொண்டு" உனக்கும் உன் வம்சத்தவ ரான யாதவர்களுக்கும் நாடாளும் உரிமை கிடையாது" எனக் கூறினான்.

யதுவைப் போலவே யயாதியின் மற்ற புதல்வர்களும் அவனது முது மையை ஏற்று தம் இளமையைக் கொடுக்க மறுத்தனர். அவர்களுக்கும் நாடு கிடையாது என யயாதி கூறி விட்டான்.

சர்மிஷ்டையின் கடைசி மகனான பூரு மட்டும் யயாதியின் முதுமையை ஏற்றுத் தன் இளமையை அவனுக்குக் கொடுக்கச் சம்மதித்தான். யயாதி தன் முதுமையைப் பூருவிடம் கொடுத்து விட்டு அவனது இளமை யைப் பெற்றுக் கொண்டான். யயாதி விஸ்வாசி என்ற என்ற அப்சரப் பெண்ணுடன் பல அழகிய இடங் களுக்குப் போய் சுகமாகக் காலம் கழித்தான்.

கொஞ்சம் காலமானதும் யயாதிக் குத் தான் அனுபவித்த சுகம் போதும் எனத் தோன்றியது. அதனால்தான் பெற்ற இளமையைத் தன் மகனுக்குத் திருப்பி கொடுத்து விட்டு அவனுக்கு யயாதி பட்டாபிஷேகமும் செய்து வைத்தான்.

பூருவின் மனைவிகள் பௌஷ்டி, கௌசல்யா என இருவர். இருவருக் கும் குழந்தைகள் பிறந்தன. கௌசல் யாவிற்குப் பிறந்த குழந்தை வம்ச வாரியாக ஜெனமே ஜெயன் பிறந் தான். இவனது பதினாறாவது தலை முறையில் துஷ்யந்தன் பிறந்தான். இவன் விசுவாமித்திரருக்குப் பிறந்த சகுந்தலையை மணந்தான். இவனது மகனே பரதன்.

விசுவாமித்திர முனிவருக்கு மகளா! அது ஒரு பெரிய கதை. ஒரு முறை விசுவாமித்திரர் கடும் தவம் செய்து கொண்டிருந்தார். அதைக் கண்ட இந்திரன் பயந்து அப்சரப் பெண் மேனகையை அழைத்து

“விசுவாமித்திரரின் கடுந் தவத்தால் தேவர்களுக்கும் தேவ லோகத்திற்கும் ஆபத்து என்று நான் அஞ்சுகிறேன். அதனால் நீ போய் உன் சாமர்த்தியத்தால் அவரை மயக்கி அவரது தவத்தைப் பாதியிலேயே நிறுத்தும்படி செய்ய வேண்டும்” என்றான்.

விசுவாமித்திரர் சாமான்னிய மானவர் அல்ல. அவர் அரண்மனையில் க்ஷத்திரிய குலத்தில் பிறந்தவர். தவம் செய்து அந்தணரானார். மகா முன் கோபி. வசிஷ்ட முனிவருக்கே புத்திர சோகம் ஏற்படும்படிச் செய்தார். சாபத்தால் தீண்டத்தகாதவனாக ஆகிவிட்ட திரிசங்குவைக் கொண்டு யாகம் செய்ய வைத்தார். அந்த யாகத்தில் அவிர்பாகம் கொடுக்க இந்திரன் பயந்து ஓடி வந்தான். திரிசங்குவிற்கு சொர்க்கத்தில் இடமில்லை என தேவர்கள் தள்ளவே விசுவாமித்திரர் அவனை அப்படியே நிறுத்தி அவனுக்காக வேறு ஒரு சொர்க்கமே நிர்மாணித்துக் கொடுத்து அதற்கு திரிசங்கு சொர்க்கம் என்றும் அவர் பெயரிட்டார்.

இப்படிச் சக்தி வாய்ந்தவர் விசுவாமித்திரர் என்பதை அறிந்தும் மேனகை அவரது தவத்தைக் கலைக்க வந்தாள். விசுவாமித்திரரின் ஆசிரமத்திற்குச் சென்று அவளும் அவருக்குப் பணிவிடைகள் செய்து அவரது அன்பிற்குப் பாத்திரமானாள். விசுவாமித்திரர் அவளது அழகில் தம் மனத்தைப் பறிகொடுத்தார். அவர் அவளோடு குடும்ப வாழ்க்கை நடத்தினார். அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது.




மேனகை தான் எடுத்துக் கொண்ட வேலையை முடித்துவிட்டதால் விசுவாமித்திரரை விட்டுப் பிரிந்து தேவலோகத்திற்குப் போகலானாள். போகுமுன் அவள் தான் பெற்ற குழந்தையை மாலினி நதிக் கரையில் விட்டுவிட்டுப் போய் விட்டாள். அந்தக் குழந்தையை சகுந்தப் பட்சி காத்து வந்தது. அதி காலையில் நதியில் குளிக்க வந்த கண்வ முனிவர் அக்குழந்தையைக் கண்டார். அவர் அதனைத் தன் ஆசிரமத்திற்கு எடுத்துப் போய் வளர்த்து வந்தார். சகுந்தப் பட்சி அக்குழந்தையைக் காத்த



துஷ்யந்தன் தன் பரிவாரங்களை ஆசிரமத்திற்கு வெளியே நிறுத்தி விட்டு அவன் மட்டும் ஆசிரமத்துள் சென்றான். அங்கு கண்வரின் குடிலை அடைந்து கண்வர் இருக்கி றாரா என்று பார்த்தான். அவர் இல்லாதது கண்டு அவன் "உள்ளே யார் இருக்கிறார்கள்?" என்று குரல் கொடுக்கவே தவக் கோலத்தில் சகுந் தலை குடிலிலிருந்து வெளியே வந் தாள். அவள் துஷ்யந்தனைப் பார்த்து மன்னனெனத் தெரிந்து கொண்டு விருந்தாளிக்கான உபசரிப்புகளைச் செய்தாள்.

சகுந்தலையின் அழகைக் கண்டு மலைத்துப் போன துஷ்யந்தன் "கண்வ முனிவர் இல்லையா?" என்று கேட்கவே அவளும் "என் தந்தை பழங்களையும் சமித்துகளையும் சேகரித்து வரப் போயிருக்கிறார். கொஞ்ச நேரம் இருந்தீர்களானால் அவரைச் சந்திக்கலாம்" என்றாள்.

துஷ்யந்தனும் "கண்வ மகரிஷி பிரம்மச்சாரி என்றல்லாவா கேள்விப் பட்டேன். அவர் உன் தந்தையா? நீ அவரது வளர்ப்பு மகளாகத்தான் இருக்க வேண்டும். உன் உண்மை யான பெற்றோர் யார்? நீ இங்கு எப்படி வந்து சேர்ந்தாய்? உன்னைப் பார்த்தது முதல் என் மனம் ஒரு நிலையில் இல்லை. விவரமாகச் சொல்" என்று கேட்டான்.

தன் பிறப்பு பற்றி ஒரு முனிவ ருக்கு கண்வர் கூறிக் கொண்டிருந்

தால் அதற்கு அவர் சகுந்தலை என்று பெயர் வைத்தார்.

சகுந்தலையும் கண்வ முனிவ ரையே தன் தந்தையாகக் கருதி ஆசி ரமப் பணிகளைச் செய்து வந்தாள். அப்போது ஒருநாள் துஷ்யந்த மன் னன் அப்பகுதியிலுள்ள காட்டில் வேட்டையாட வந்தான். அவன் கண்வ முனிவரின் ஆசிரமத்தை அடைந் தான்.

அங்கு கண்வரின் சீடர்கள் ஹோமம் செய்து கொண்டிருந்தார் கள். சிலர் வேதங்களை ஓதிப் பழ கிக் கொண்டிருந்தார்கள். வேறுசிலர் வாதவிவாதங்கள் புரிந்து கொண் டிருந்தார்கள்.

இதையெல்லாம் கண்டு மகிழ்ந்த

ததை சகுந்தலை கேட்டிருந்தாள். அதனால் கண்வர் தன்னைக் கண்டு எடுத்து வந்து வளர்த்த விவரத்தை அவளது துஷ்யந்தனிடம் கூறினாள்.

அதைக் கேட்ட துஷ்யந்தன் "அப்படியானால் நீ ஒரு அரசரின் மகள் என்றாகிறது. அரசகுமாரியான உன்னை மரவுரி அணிந்து தவக் கோலத்திலா இந்த ஆசிரமத்தில் விட்டு வைப்பது? நீ என்னை மணந்து என் அரண்மனைக்கு வந்து பட்டத்து ராணியாகி அரியாசனத்தில் என்னோடு அமர வேண்டும். அதுதான் நீ இருக்க வேண்டிய இடம்" என்றான்.

சகுந்தலையும் "என் தந்தை வந்ததும் அவரது அனுமதியை பெற்றுத் தங்கள் அரண்மனைக்கு வருகிறேன்" என்றாள். அவள் தன்னை விரும்புகிறாள் என்று அறிந்து கொண்ட துஷ்யந்தன் "இதோ பார். நாம் க்ஷத்திரியர்கள். நாம் காந்தர்வ விவாகம் செய்து கொள்ளலாம். அது முறைப்படி செல்லும். இதற்கு மந்திரமோ, பெற்றோர் அனுமதியோ தேவை இல்லை" என்றான். சகுந்தலையும் "எனக்கு ஆண் குழந்தை பிறந்தால் அவனே உங்களுக்குப் பின் அரசனாவான் என்று வாக்களித்தால் உங்களை நான் இப்போதே காந்தர்வ விவாகம் செய்து கொள்கிறேன்" என்றாள்.

துஷ்யந்தன் அவ்வாறே வாக்களித்து சகுந்தலையை காந்தர்வ





விவாகம் செய்து கொண்டான். அதன் பிறகு அவன் சகுந்தலையிடம் விடை பெற்றுக் கொண்டு "நான் தலை நகருக்குப் போய் ஆட்களை அனுப்பி உன்னை அரண்மனைக்கு அழைத்துக் கொள்கிறேன்" என்று கூறிவிட்டு சென்றான்.

இதற்குச் சற்று நேரமான பின் கண்வர் தாம் சேகரித்த பழங்களோடு தம் குடிலை அடைந்தார். அங்கு சகுந்தலையின் நிலை கண்டு அவர் ஞான திருஷ்டியால் நடந்ததை அறிந்து கொண்டு விட்டார்.

அவர் சகுந்தலையிடம் "மகளே நீ தக்க கணவனையே தேர்ந்தெடுத்து மணந்து கொண்டிருக்கிறாய். உனக்கு உலகமே போற்றும் மகன் பிறக்கப் போகிறான். நீ ஏதாவது விரும்பினால் தாராளமாகக் கேள்" என்றார். சகுந்தலையும் "என் மகன் நீண்ட காலம் வாழ வேண்டும் என்று நீங்கள் வாழ்த்துங்கள். அவன் பெயரும் புகழும் பெற ஆசீர்வதியுங்கள்" என்று வேண்டினாள்.

கண்வரும் தம் ஆசிகளை அளிக்கவே சகுந்தலை மனம் நிம்மதி பெற்றாள். உரிய காலத்தில் சகுந்தலை ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். கண்வர் அக்குழந்தைக்கு முறைப்படி ஜாதக, நாமகரணம் முதலியவற்றை நடத்தினார். அக்குழந்தை ஆறாண்டு காலம் அங்கே வளர்ந்து காடுகளில் திரிந்து சிங்கங்களையும், புலிகளையும், யானைகளையும் அடக்கி அவற்றின் மீது ஏறி அமர்ந்து திரிந்து வந்தான். அவனை எல்லோரும் சர்வதமனன் என்று பெயரிட்டு அழைத்தனர். சர்வதமனன் என்றால் எல்லோரையும் அடக்குபவன் என்று பொருள். அவன் உண்மைப் பெயர் பரதன்.

ஒருநாள் கண்வர் சகுந்தலையிடம் "மகளே! உன் மகன் பரதன் இளவரசுப் பட்டம் பெறத் தகுதி பெற்று விட்டான். இனி இவன் தன் தந்தையோடு அரண்மனையில்தான் இருக்க வேண்டும். நீயும் எவ்வளவு காலம் தான் கணவனை விட்டுப் பிரிந்து தனியாக இருப்பாய்? நாளையே உன்னை உன் கணவன் வீட்டிற்கு அனுப்புகிறேன்" என்றார்.

மறுநாள் கண்வரின் சீடர்கள் சகுந்தலையை அழைத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றார்கள். அங்கு அவர்கள் அரண்மனையில் விட்டு விட்டு ஆசிரமத்திற்குத் திரும்பினார்கள். சகுந்தலையை அரண்மனைக்குள் செல்ல காவல் வீரர்கள் அனுமதித்தார்கள்.

துஷ்யந்தன் சகுந்தலையைப் பார்த்தும்கூட முன்பின் பாராதவன் போல இருந்தான். சகுந்தலை அது கண்டு திடுக்கிட்டாள். அவள் துஷ்யந்தனைப் பார்த்து "அரசே! நீங்கள் காட்டில் வேட்டையாட வந்து கண்வரின் ஆசிரமத்திற்கு வந்து என்னை காந்தர்வ விவாகம் செய்து கொண்டீர்களே. எனக்குப் பிறக்கும் மகனுக்குப் பட்டம் அளிப்பதாகக் கூறினீர்களே. இவற்றை எல்லாம் மறந்து விட்டீர்களா?" என்று கேட்டாள்.

துஷ்யந்தன் பேசாமல் இருக்கவே சகுந்தலை "அரசே! ரகசியமாக நடந்ததெல்லாம் யாருக்கும் தெரியாது என்றா நினைக்கிறீர்கள்? இதற்கெல்லாம் சாட்சி உங்கள் மனச்சாட்சியே. உண்மையை மறைப்பது மகாப் பாவம். அன்று எப்படி என்னை மணந்து கொண்டீர்களோ அப்படியே என்னை ஏற்றுக் கொள்ள வேண்டும். மிருகங்களும் பட்சிகளும் கூட தாம் ஈன்ற குட்டிகளையும் குஞ்சுகளையும் அன்புடன் அரவணைக்கின்றனவே. இதோ உங்கள் மகன் பரதன். பாருங்கள்" என்றாள்.

அப்போதும் துஷ்யந்தன் பேசவில்லை. அச்சமயம் அசரீரி வாக்கு "அரசே! இந்த பரதன்தான் உனக்கும் சகுந்தலைக்கும் பிறந்த மகன். இவனை வளர்த்துப் பட்டம் சூட்டு" என்றது.

துஷ்யந்தன் அப்போதுதான் சகுந்தலை தன் மனைவி என்று சந்தேகமறத் தெரிந்து கொண்டான். பரதன் தன் மகன் என்பது தெரிந்து விட்டது. அவன் அவர்களை ஏற்றுக் கொண்டான். உலகமே அவர்களை தம்பதிகளாக ஏற்று பரதனை அவர்களது மகன் என்றும் போற்றியது.







# இரு சகோதரிகள்

உமாவும் லட்சுமியும் அக்கா தங்கைகள். இருவருக்கும் வயதிலும் அதிக வித்தியாசம் இல்லை இரண்டே வருடங்கள்தான். ஆனால் லட்சுமிக்குப் பொறாமையும் கர்வமும் மிக அதிகம். பொறுமை என்பதும் கிடையாது.

இருவரில் லட்சுமி அழகானவள். அவளைக் கண்டு ஒரு பணக்காரனின் மகன் மயங்கிக் கல்யாணம் செய்து கொண்டான். அதனால் உமாவின் கல்யாணமும் அதற்குமுன் ஒரு சாதாரண குடும்பத்தில் பிறந்த வாலிபனோடு நடந்தது.

உமாவின் கணவன் பட்டணத்தில் அரசாங்க அலுவலகம் ஒன்றில் வேலை பார்த்து வந்தான். பார்க்க அழகாக இல்லாது போனாலும் விகாரமாக இருக்கவில்லை. அக்காவும் தங்கையும் கல்யாணம் ஆனதும் தம் கணவன்களோடு போய்க் குடித்தனம் ஆரம்பித்தார்கள்.

லட்சுமி எல்லா வசதிகளைப் பெற்றிருந்தபோதிலும் உமாவின் குடித்தனம் எப்படி நடக்கிறது என்று அடிக்கடி விசாரித்துத் தெரிந்து கொண்டே இருந்தாள். உமா சந்தோஷமாக இருக்கிறாள் என்பதைக் கேட்க அவளால் பொறுக்க முடியவில்லை. ஒருநாள் அவள் தன் கணவனை அழைத்துக் கொண்டு உமாவின் வீட்டிற்குச் சென் றார்கள். உமாவின் வீடு மிகச் சிறியதே. வீட்டில் விலையுயர்ந்த பொருள் என்று எதுவும் இருக்கவில்லை. எல்லா விதத்திலும் உமாவிற்கு தனக்கு உள்ளது போல வசதிகள் இல்லை என்பதை லட்சுமி கண்டாள். இப்படி இருந்தும் உமா எப்படி சந்தோஷமாக இருக்கிறாள் என்பதை லட்சுமியால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவள் கணவனுக்கும்

-பாபநாசம் சாமா-



பாராட்டினார்கள். சிலர் அவனிடம் "நீங்கள் உங்கள் ஊரில் இம்மாதிரி இலக்கிய இசைப் பேருரைகள் நிகழ்த்துகிறீர்களா?" என்று கேட்டர் கள்.

அவனும் "நானும் இம்மாதிரி இசைப் பேருரைகளை நிகழ்த்த விரும்புகிறேன். ஆனால் நேரம்தான் இல்லை. வியாபாரத்தில் மூழ்கி விடுவதால் பலர் என்னிடம் அது சம்பந்தமாய் யோசனை கேட்க வரு கிறார்கள். லட்சக்கணக்கில் பணம் போட்டு வியாபாரம் செய்வது என் பது எளிதா? இந்த இலக்கிய அறிவு படித்தால் கிடைத்துவிடும். வியாபார அனுபவம் அப்படி இல்லையே" என்றான்.

அது ஒரு புதிராகவே இருந்தது.

உமாவின் கணவன் மாலை வேளைகளில் இலக்கிய இசைப் பேருரைகளை நிகழ்த்தி வந்தான். அதைக் கேட்கப் பலரும் வந்தார்கள். வந்தவர்களெல்லாம் அவனைப் புகழவே அதனால் உமாவும் சந் தோஷம் அடைந்தாள். இது அவர் களது மகிழ்ச்சிக்கு ஒரு காரணம் என்று லட்சுமி தன் கணவனிடம் கூறினாள்.

அன்று மாலை உமாவின் கண வன் இலக்கிய உரை நிகழ்த்திய போது லட்சுமியின் கணவன் அதற் குப் புதுப்புது அர்த்தங்களைக் கூறி னான். அது கண்டு யாவரும் அவ னது பாண்டித்தியத்தைப் பெரிதும்

பலர் "நீங்கள் சொல்வது சரி" எனவே உமாவின் கணவன் "இந்த இசைப் பேருரைகள் நிகழ்த்துவது எல்லாம் வேலை வெட்டி இல்லாமல் இருப்பவர்கள் செய்வது. இவருக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒரு லட்சம் ரூபாய்க்குச் சமம்" என்று லட்சுமியின் கணவனைப் புகழ்ந்தான்.

உமாவிடம் பழங்கால விக்கிரகம் இருந்தது. அது அவ்வீட்டுப் பின் புறம் கிணறு தோண்டும் போது கிடைத்தது. அது பார்க்க அழகாக இருந்தது. பலர் அதை விலைக்கு வாங்கிக் கொள்ள முன் வந்தார்கள். ஆனால் உமா அதை விற்க இசைய வில்லை. அதனால் அந்த விக்கிரகத் தைக் காண தினமும் பலர் உமாவின்



வீட்டிற்கு வந்தார்கள். இதனால் உமாவுக்கு மிகவும் சந்தோஷம் என எண்ணி லட்சுமி பொறாமை கொண்டாள்.

நான்கு நாட்கள் இருந்து விட்டு தம் ஊருக்குப் புறப்படுகையில் லட்சுமியும் அவள் கணவனும் உமாவையும் அவன் கணவனையும் தம் ஊருக்கு வரும்படி அழைத்தார்கள். உமாவும் "வருகிறோம். ஆனால் இப்போதல்ல. உனக்கு என் பரிசாக ஏதாவது கொடுக்க வேண்டுமே. உன் அந்தஸ்த்திற்கு ஏற்ப கொடுக்கும் சக்தி எனக்கு இல்லை. அதனால் நீ என்னிடமுள்ள பொருள்களில் எதை வேண்டுமானாலும் கேள். கொடுக்கிறேன்" என்றாள்.

லட்சுமி உடனே "நீ வைத்திருக்கும் விக்கிரகத்தைக் கொடு" எனவே உமாவும் அதை அவளுக்குக் கொடுத்து விட்டாள். ஊர் போய்ச் சேர்ந்ததும் லட்சுமியின் கணவன் அவளிடம் "நீ ஏன் விக்கிரகத்தை உமாவிடம் கேட்டு வாங்கிக் கொண்டாய்? இப்படிக் கொடுத்து உமா பெருமை அடைந்து விட்டாளே" என்றான்.

அதற்கு லட்சுமி "என்னிடம் உள்ளது போல ஒரு பொருள் இன்னொருவரிடம் இருக்கக்கூடாது. இந்த விக்கிரகம் இப்போது என் ஒருத்தியிடம் தான் இருக்கிறது. வேறு யாரிடமும் இல்லை. இதை நான் உமாவிடமிருந்து பெற்றது கூட வேறு யாருக்கும் தெரியாது. எனவே எனக்குத் தான் இதனால் பெருமை" என்றாள்.

சில நாட்களுக்குப் பின் உமாவும் அவள் கணவனும் லட்சுமியின் வீட்டிற்கு வந்தார்கள். அவர்களுக்கு தன்னிடமுள்ள பொருள்களை எல்லாம் காட்டி லட்சுமி பெருமை அடித்துக் கொண்டாள். உமாவோ தன் தங்கை வசதியாக வாழ்வது கண்டு மகிழ்ந்தாள்.

உமா தன் ஊருக்குக் கிளம்பும் நாள் வந்தது. அன்று ஒரு வியாபாரி வந்து லட்சுமியின் கணவனிடம் "என்னிடம் இரு அபூர்வ முத்துக்கள் உள்ளன. ஒவ்வொன்றும் பத்தாயிரம் வராகன்கள் விலையாகும். ஒன்றை



நீங்கள் வாங்கிக் கொண்டால் மற்றதை நம் மன்னருக்கு விற்று விடுகிறேன்" என்றான்.

லட்சுமி அவற்றைப் பார்த்து விட்டு "இம்மாதிரி முத்துக்கள் வேறெங்கும் இல்லையென்றால் இரண்டையும் நானே வாங்கிக் கொள் கிறேன்" என்னிடம் உள்ள முத்தைப் போல இன்னொருவரிடம் இருக்கக் கூடாது" என்றாள். வியாபாரியும் முத்துக் களைக் கொடுத்து விட்டுப் பணத்தை வாங்கிக் கொண்டு போனான்.

லட்சுமி ஒரு மட்டரகமான புட வையை வாங்கி உமாவுக்குக் கொடுத்து அவளை ஊருக்கு அனுப் பினாள். அதற்குப் பின் லட்சுமிதான் உமாவைவிட சந்தோஷமாக இருப்ப தாக எண்ணி சந்தோஷப் பட்டுக் கொண்டாள். அவள் தனக்கு மிஞ்சி யாரும் இல்லை என்று எண்ணி வேலை எதுவும் செய்யாமல் சாப்பிட் டுப் படுத்துத் தூங்கியதால் அவள் உடம்பு மிகவும் பருத்து விட்டது. அதனால் அவள் அழகு குறைந்தது.

அப்போது அவள் "இப்போது உமா என்னைவிட ஒடிசலாக இருப் பாளே. அவள் என்னைவிட அழகாக இருப்பாளே" என்று எண்ணிப் பொருமினாள். தன் உடல் பருமனை குறைக்க அவள் வைத்தியர்களிடம் யோசனை கேட்டாள். அவர்கள் அவளை சோதித்துப் பார்த்து விட்டு "உடலில் நீர்சத்து அதிகமாகி விட்டது இது மிகவும் ஆபத்தானது. இதனால் கை கால்கள் இயங்காமல் கூடப் போய் விடலாம். நீங்கள் சாப்பிடும் அளவை மிகவும் குறைத் துக் கொண்டு தினமும் தேகப் பயிற்சி செய்ய வேண்டும்" என்றார்கள்.

உமாவிற்கு லட்சுமி உடல்நலம் குன்றியது தெரிந்தது. அவள் லட்சுமி யைக் காண வந்தாள். உமாவைக் கண்டதும் லட்சுமியின் முகம் மலர்ந் தது. ஏனெனில் அவள் அப்போது லட்சுமியை விடப் பருமனாகி இருந் தாள். எனவே அவள் "என்ன உமா, இப்படி ஒரேயடியாகப் பருத்து விட்டாய்?" என்று சிரித்த வாறே கேட்டாள்.

உமாவுக்கு தான் பருமனாக

இருப்பதை லட்சுமி கண்டு மகிழ்கிறாள் என்பது புரிந்து விட்டது. ஆனாலும் அவளைப் பற்றி விசாரித்து வைத்தியர்கள் கூறியதைக் கேட்டு லட்சுமியை வலுக்கட்டாயமாக உமா தன் ஊருக்கு அழைத்துச் சென்றாள்.

அப்போது உமாவின் கணவனுக்கு லட்சுமியின் மன இயல்பு என்ன என்று தெரிந்து விட்டது. அவன் உமாவிடம் "உன் தங்கையின் உடலின் பருமன் குறைய வேண்டுமானால் நீ உன் உடலின் பருமனைக் குறைத்துக் கொள்ள தேகப் பயிற்சி செய்ய வேண்டும். உட் கொள்ளும் உணவையும் குறைத்துக் கொள்ள வேண்டும். அப்போது உன் தங்கை உன்னோடு போட்டி போட்டுக் கொண்டு தன் உடலின் பருமனைக் குறைத்துக் கொள்வாள்" என்றான்.

உமாவும் "என் தங்கைக்காக இதை தாராளமாகச் செய்கிறேன்" என்று கூறி அன்று முதல் தேகப் பயிற்சி செய்து சாப்பிடும் உணவின் அளவையும் குறைக்கலானாள். அவளது உடலின் பருமன் குறையலாயிற்று.

இதைக் கண்ட லட்சுமி உமாவுடன் போட்டி போட்டு தேகப் பயிற்சி செய்யலானாள். உண்ணும் உணவையும் குறைத்தாள். உமாவின் பருமன் குறைவது போலத் தன் உடலின் பருமனும் குறைவது கண்டு லட்சுமி மகிழ்ந்தாள். அவள் நன்கு இளைத்து அழகானவளாய்த் தோன்றியதும் திருப்தி அடைந்து தன் ஊருக்குச் சென்றாள்.

அவள் போனதும் உமாவின் கனவன் "உன் தங்கையின் மனப் போக்கை அறிந்து நான் கூறிய யோசனை எப்படி? நீ அவளைவிடப் பருமனாக இருப்பது கண்டு அவள் மகிழ்ந்தாள். இப்போது அவள் உடல் மெலிந்ததும் தான் உன்னை விட அழகாக இருப்பதாக எண்ணி மகிழ்கிறாள்! என்ன விசித்திரமான பிறவி அவள்" என்று சிரித்துக் கொண்டே கூறினான்.



# அம்புலிமாமா செய்திகள்







## மூவாயிரம் ஆண்டுக்கு முன்னிருந்த மனித உடல்

பல லட்சம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மிருகங்கள், பட்சிகள் ஆகிய வற்றின் எலும்புக் கூடுகள் உலகில் ஆங்காங்கே கிடைத்தன என்று செய்தி களில் படிக்கிறோம். அண்மையில் வடமேற்கு ஈரானில் உப்புச் சுரங்கத் தில் ஒரு மனித உடல் கண்டுபிடிக்கப் பட்டது. கண்கள், மூக்கு, காதுகள், மீசை ஆகியவை சேதப்படவில்லை. உடலில் உடைகளும், ஒரு காலில் காலனியும், இடது காதில் தங்கக் கடுக்கனும் உள்ளன. இவற்றை எல்லாம் கொண்டு பார்த்தால் அவன் பழங்கால பாபிலோனியன் அல்லது அஸ்ஸிரியனாக இருக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். அவன் சுமார் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்திருக்கலாம் எனவும் அவனருகே கிடைத்த பாத்திரங்கள் கி.மு.1000 ஆண்டுகளுக்கு முந்தியவை என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

## உயிர் தப்பிய அதிசயம்!

இங்கிலாந்தில் கோல்சஸ்டர் நகரின் மீது டாம்மேலோனி ஒரு ஜெட் விமானத்தை ஓட்டிக் கொண்டிருந்தபோது அது திடீ ரென 'பல்டி' அடித்தது. அதனால் விமானியினருகே உட்கார்ந்திருந்த அவனது சகோதரன் விமானத்திற்கு வெளியே தூக்கி எறியப்பட்டான். சுமார் 3000 அடி உயரத்தி லிருந்து கீழே விழுந்த அவனுக்கு இலேசான காயங்களே ஏற்பட்டு உயிர் தப்பினானாம். மிகக் கவலையுடன் விமானத்திலிருந்து இறங்கி வந்த தன் சகோதரனை அவன் சிரித்துக் கொண்டே வரவேற்றானாம்.

## மிகப் பெரிய புத்த விக்கிரகம்

ஹாங்காங் அருகே லாங்டோவ் தீவில் 36 மீட்டர் உயர புத்த விக்கிரகத்தை 50,000 பக்தர் கள் தரிசிக்க அதிகாலையில் கவர்னர் க்ரிஸ் போடஸ் அதை நிறுவினார்.




# மன மயக்கம்

**வி**ந்திய மலைக் காட்டில் ஒரு மா முனிவர் இருந்தார். அவர் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று கருதி மக்கள் வந்து அவரை தரிசித்துத் தம் கஷ்டங்களைக் கூறி அவற்றிலிருந்து விடுபட அவர் கூறும் அறிவுரைகளைக் கேட்டுச் சென்றனர்.

தினமும் பலர் தமது கஷ்டங்களைக் கூறக் கேட்டு அம்முனிவர் மனதில் பலவிதமான சந்தேகங்கள் எழுந்தன. "நான் படித்துத் தெரிந்து கொண்டதற்கும் உலக அனுபவத்திற்கும் எவ்வித சம்மந்தமும் இருப்பதாகத் தெரியவில்லையே. உலகில் தர்மம் தலைதூக்க முடியாமல் அதர்மத்தின் கையை ஓங்குகிறதே. கடவுள், சொர்க்கம், நரகம் என்பதெல்லாம் வெறும் கற்பனைதானா? பொய்யா? இதன் உண்மையை அறிந்தாலே எனக்கு மனநிம்மதி" என எண்ணிக் கொண்டு பல இடங்களைப் பார்த்து வரக் கிளம்பினார்.

வாழ்க்கையிலே விரத்தி அடைந்த அவர் தம் கமண்டலத்தையும் கைத்தடியையும் எடுத்துக் கொண்டு போய்க் கொண்டிருந்தார் வழியில் பனிரெண்டு வயதான ஒரு சிறுவன் அவரைக் கண்டு புன்னகை புரிந்தான். முனிவர் அவனோடு பேசி அவனும் பல இடங்களைப் பார்க்கக் கிளம்பியவன் என்று தெரிந்து கொண்டு அவனைத் தம்மோடு சேர்த்துக் கொண்டு வழி நடந்தார்.

இருவரும்ஒரு ஊரின் எல்லையை அடைந்தார்கள். அங்கு சிலர் அவர்களை வரவேற்று ஊரின் நடுவே உள்ள ஒரு பெரிய மாளிகைக்கு அழைத்துச் சென்றார்கள். அவ்வீட்டு எஜமானன் அவர்களுக்கு நல்ல விருந்தை அளித்தான். சிறுவனைக் கண்டு மகிழ்ந்து போய் வீட்டு எஜமானன் அவனுக்குத் தங்கக் கிண்ணத்

-சிவனார் செல்வன்-



தைதை முனிவரும் பார்த்ததார். அது அவருக்கு மிகுந்த வேதனையை அளித்தது. ஆனால் அவனிடம் "ஏன் இப்படிச் செய்தாய்?" என்று எல்லோர் முன்பும் கேட்க ஏனோ அவர் விரும்பவில்லை.

முனிவரும் சிறுவனும் போய்க் கொண்டே இருக்கையில் திடீரென பலத்த மழை பெய்யலாயிற்று. அவர்கள் எங்காவது ஒதுங்க இடம் கிடைக்குமா என்று பார்க்கையில் சற்று தூரத்தில் 'மினுக்' மினுக்' கென்று சிறு ஒளி தெரியவே அவர்கள் அது வந்த இடத்தை அடைந்தார்கள்.

அது ஒரு சிறிய வீடு. அவர்கள் அதன் கதவைத் தட்டி "ஐயா! நாங்கள் வழிப் போக்கர்கள். மழையில் அகப்பட்டுக் கொண்டு விட்டோம். இன்றிரவு இங்கே தங்க இடம் கொடுத்தால் உங்களுக்குப் புண்ணியம் உண்டு" என உரக்கக் கூவினர்.

சற்று நேரத்திற்குப் பின் அவ் வீட்டு வேலைக்காரன் முனகிக் கொண்டே கதவைத் திறந்து அவர்களை அழைத்துக் கொண்டு போய் தன் எஜமானன் முன் விட்டான். அவ்வீட்டுக்காரனோ "என்ன இது? பாதி ராத்திரியில் யாரையோ கொண்டு வந்து புண்ணியம் என்று உளறுகிறாயே" என்று கத்தினான். அவன் மகாக் கஞ்சன். முடிவில் அவன் "சரி. சரி. அவர்களை இருக்க விடு. சாப்பிட ஏதாவது

தில் பாயசம் விட்டுக் குடிக்கக் கொடுத்தான். தனக்குப் பரிசாகக் கிடைத்த அந்த கிண்ணத்தை அப்பணக்காரன் தன் உயிரினும் மேலாகப் போற்றி வந்தான்.

அன்றிரவு முனிவரும் சிறுவனும் அந்த மாளிகையில் தங்கினார்கள். மறுநாள் அவர்கள் வீட்டு எஜமானனிடம் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். அவர்கள் போனதும் அந்த மாளிகையே அமளிப் பட்டது. அந்த எஜமானனுக்குப் பிரியமான தங்கக் கிண்ணம் காணவில்லையாம்.

கிண்ணத்தை எடுத்தவன் முனிவரோடு வந்த சிறுவனே. அதை அச் சிறுவன் எடுத்து மறைத்து வைத்

இருந்தால் கொடு. எங்கே இருக்கப் போகிறது? பாத்தி ரத்தில் பருக்கைகள்தான் ஒட்டி மிஞ்சி இருக்கும். ஆனால் ஜாக்கிரதை. அவர்கள் மீது ஒரு கண் வைத்திரு" என்றான்.

சிறுவன் பாத்திரங்களில் ஒட்டி இருந்த பருக்கைகளை எல்லாம் சேகரித்து எடுத்து அதில் பாதியை முனிவருக்குக் கொடுத்து விட்டு மீதப் பாதியைத் தானும் தின்றான். சற்று நேரத்தில் மழை நின்றது. வேலைக்காரன் வந்து வெளியே போகச் சொல்லுமுன் தாமே போய் விடலாமென எண்ணி அவர்கள் எழுந்து வந்தார்கள்.

வீட்டு வாசலைக் கடக்குமுன் சிறுவன் அங்கு நின்ற வேலைக்கார னிடம் தான் திருடி எடுத்து வந்த தங்கக் கிண்ணத்தைக் கொடுத்து "அப்பனே! அகாலத்திலும் நீ உன் எஜமானனிடம் சொல்லி எங்களுக்கு இடமளித்தாய். இங்கு கிடைத்த உண வும் எங்கள் பசியைத் தணித்தது. உங்களை போன்ற ஒரு சில நல்ல வர்கள் இருப்பதால்தான் உலகம் நிலைத்திருக்கிறது. உங்கள் உதவிக்கு ஏழேழு பிறப்பு எடுத்து நன்றி செலுத்தினாலும் அக்கடன் தீராது. என்னால் முடிந்தது இதுதான். இதை நீயும் உன் எஜமானனும் வைத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

சிறுவனின் இச்செயல் மிகவும் விசித்திரமாக முனிவருக்குப் பட்டது. அவருக்குக் கோபம் வந்தது. சிறு வனைக் கண்டிக்க எண்ணிய போதி லும் அப்போது அவர் எதுவும்



கூறாமல் தம் கோபத்தை அடக்கிக் கொண்டார்.

அப்போது சிறுவன் "ஐயனே! என் செயல்கள் தங்களைக் குழப்பு கின்றனவா? இது நான் ஆடும் நாட கம். உங்கள் சந்தேகங்களைத் தீர்க் கவே நான் வந்தேன். முதலில் நமக்கு நல்ல விருந்து அளித்த பணக்காரன் புகழ்பெற டம்பமாக வாழ்பவன். அவன் கடனில் மூழ்கித் தத்தளிக்கிறான். அவனிடம் இருந்த ஒரே விலையுயர்ந்த பொருள் தங்கக் கிண்ணம்தான். அதை இழந்ததால் அவன் இனி திருந்தி விடுவான். படாடோப வாழ்க்கை வாழாமல் சிக்கனமாக வாழ்வான். இவ்வாறு அவன் குடும்பத்தைக் காப்பாற்றி விட்டேன்" என்றான்.

அப்போது முனிவர் "அது சரி. அந்தக் கிண்ணத்தை மகாக் கஞ்ச னுக்கு ஏன் கொடுத்தாய்?" என்று கேட்டார். சிறுவனும் "அந்தக் கஞ்சன் யாருக்குமே எதையும் கொடுத்துப் பழக்கப்பட்டவன் அல்ல. பணத்தை வாங்கிப் பூட்டி வைக்கத்தான் தெரிந் தவன். நான் கொடுத்த தங்கக் கிண் ணம் அவனது மனதை மாற்றி இருக்கிறது. ஒரு சில பருக்கைகள் கொடுத்தால் ஒரு தங்கக் கிண்ணமே கிடைத்தது என்றால் மற்ற பொருள் கள் கொடுத்தால் இன்னும் என் னென்ன கிடைக்குமோ என்று எண்ணுகிறான். இனி அவன் பிற ருக்குக் கொடுக்கும் பழக்கம் பெற்று விடுவான். இனி அவனது பணத் தால் மற்றவர்கள் நன்மை அடைவார் கள்" என்றான்.

முனிவரும் "எனக்கு ஏற்பட்ட சந்தேகங்கள் தீர்ந்து விட்டன" என்று கூறி அச்சிறுவனைப் பார்த்தார். அப்போது அவன் நின்ற இடத்தில் ஒளி வீசியது. ஒரு விமானம் ஆகா யத்திலிருந்து இறங்கி வந்தது. சிறு வன் அதில் அமர்ந்து மாயமாய் மறைந்து போனான்.

முனிவர் நிறைமனதுடன் மறுபடி யும் விந்திய மலைக் காட்டிற்கே திரும்பிச் சென்றார்.



## இயற்கை விநோதங்கள்




## நிறம் பாதுகாக்கிறது!

பறவைகளைப் பிடித்துத் தின்னும் பிராணிகள் தலையில் கொண்டை, உடலில் அடர்வண்ண இறகுகள் இருக்கும் பறவைகளைப் பிடிக்காமல் விட்டு விடும். அடர் வண்ணப் பறவைகளின் மாமிசம் ருசியாக இராது என அப்பிராணிகள் கருதுகின்றன வாம். குக்கூ குருவிகளின் அடர்வண்ணம் மட்டுமல்லாது அவற்றின் உடலிலிருந்து கிளம்பும் துர்நாற்றம் அப் பிராணிகளை அருகில் வரவிடாமல் தடுக்கிறது. இக் குருவிகளின் கூடுகள் சுத்தமாக இராது எப்போதும் நாற்றமடிக்கும். எனவே அவை எதிரிகளிடமிருந்து தப்பி விடுகின்றன.

## உருளைக்கிழங்கின் கதை!

தென்னமெரிக்காவிலிருந்து 16வது நூற்றாண்டில் சர் வால்டர்ராலே உருளைக்கிழங்கை இங்கிலாந்திற்கு கொண்டு சென்றார். சில வருடங்களுக்குப் பின் அங்கு கடும் வறட்சி ஏற்படவே உண்ண உருளைக் கிழங்கைத் தவிர வேறெதுவும் மிஞ்சவில்லை. அக் கிழங்குதான் நாட்டிற்கு கெடுதலை விளைவித்தது என நம்பி மக்கள் அதை உண்ணாமல் விட்டுவிட்டனர். 17வது நூற்றாண்டில் உருளைக்கிழங்கே விளைவிக்கக் கூடாதென்று இங்கிலாந்தில் தடை விதிக்கப்பட்டது. இதற்கு நூறு வருடங்களுக்குப் பின் பவேரியாவிற்குச் சென்ற ஒரு படைத் தளபதி அங்கு படை வீரர்களுக்கும் உழைப்பாளிகளுக்கும் உருளைக்கிழங்கே முக்கிய உணவாக இருப்பதைக் கண்டார். அவர் அதனை மீண்டும் இங்கிலாந்திற்குக் கொண்டு வந்து எங்கும் பயிரிடச் செய்தார். நம் நாட்டில் உருளைக்கிழங்கு முதன் முதலாக 1820ல் நீலகிரி மலையில்தான் விளை விக்கப்பட்டது.




## 'தங்க' இலை

தமிழ்நாட்டில் சித்தர்கள் கல் தாமரை என்ற மலரை ஒரு மகத்தான மூலிகையாகக் கருதினர். இந்தக் கல் தாமரையின் இலை தாமரை இலைபோல் மேல்புறம் பச்சையாக இருக்கும். இதன் சாறு மிகவும் சக்தியுள்ளது எனவும் கூறுகிறார்கள். இந்த இலைகளைத் தரை மீது பரப்பி அதன்மேல் நின்று ஆகாயத்தைப் பார்த்தால் பட்டபகலில் கூட நட்சத்திரங்களைக் காணமுடியுமாம். அதாவது கண்பார்வை நன்கு தெரியுமாம். மேலும் செப்பு போன்ற உலோகங்களை இந்தச் சாறு தங்க மாக்கி விடுமென சித்தர்கள் கூறுகின்றனர்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!






SUPER
RUBBER










THE

# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 நவம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ செப்டம்பர் 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

---

## ஜுலை மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **வியப்பை பொழியும் விழிகள்**
இரண்டாவது போட்டோ : **வித்தையைப் பொழியும் விரல்கள்**
பரிசு பெற்றவர் : **திரு. மலைஅரசன், அருகந்தம்பூண்டி.**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**


---

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றூர், உறவினர்களுக்கு நீங்கள் அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்




## புதிய குஸ்தி சேம்பியன் சூப்பர் எம்

பம்பாய், ஆகஸ்டு 1994 எங்கள் விசேஷ நிருபர்: "ஹா! கடைசியில் என் சூப்பர் சக்தி அவனுக்கு புரிஞ்சிடுச்சு" என்று கர்ஜனை செய்தவாறு சொன்னான் சூப்பர் எம். சீறும் சுல்தானைக் கீழே தள்ளி கடைசியாக எண்ணும் வரை அழுத்திப்பிடித்து புதிய குஸ்தி சேம்பியன் ஆனான் சூப்பர் எம். வெற்றியடைந்த ஆனந்தத்தில் ஒரு சூப்பர் மில்க் பிஸ்கட் பேக்கட்டை எடுத்து அதிலுள்ள பிஸ்கட்டை எடுத்து சாப்பிட்டான் சூப்பர் எம். பிறகு கண்ணை சிமிட்டியவாறு தன் ரசிகர்களிடம் சொன்னான் "பாவம், அவனுக்கு சூப்பர் மில்க் பிஸ்கட்டின் சூப்பர் சக்தி, சூப்பர் சுவையைப்பத்தி ஒண்ணும் தெரியாது. தெரிந்திருந்தால்....." தொடர்ந்து சூப்பர் எம் சொன்னான் "அடுத்ததடவை நன்னா தயார் பண்ணிக்க. அப்புறம் சண்டை போட வா.... **சேலஞ்சுடன்**".




சூப்பர் சக்தி. சூப்பர் சுவை. சூப்பர் மில்க் பிஸ்கட்




பார்லே

everest/94/PP/139-tm